Santhalinga Thesikar

Auteur: vira śaiva de Thiruthuraiyur, vécut dans le math de Porur, près de Chidambaram construit par lui-même.

Autres oeuvres: Vairakkia Sathakam

——— Thipam, annoté par Chidambara swami de Porur

Avirotha Wunthiyar

Nenchu vidu thuthu

உ

# கொலைமறுத்தல்.

திருத்துறையூர்

சாந்தலிங்கசுவாமிகள்

அருளிச்செய்தது.

---

இந்நூற்குத்

திருப்போரூர்

சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்தஉரையுடன்,

காஞ்சிபுரம்

சபாபதிமுதலியாரவர்கள்

முன்னிலையில்

பரிசோதிக்கப்பட்ட

பிரதிக்கிணங்க

புங்கத்தூர்

கந்தசாமிமுதலியாரால்

௧௮௬௪ (வரு) நவம்பர் மீ

சென்னைமாநகரம்

ஏஷியாடிக்அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல் |
|---|---|---|---|
| கஉ | அ | ர்வரு | ரவரு |
| உ0 | க0 | குத்திரங் | குத்தரங் |
| உச | கூ | தோக்கில் | தொக்கில் |
| ௩ச | உக | தமதிலத் | தமதில்லத் |
| ௫0 | கா | கிழுவிலே | கிழிவிலே |
| ௫௫ | கா | கழினி | கழனி |
| ௫எ | ௩ | வாக்கி | வாக்கிய |
| ௫கூ | கூ0 | புறச்மைமயி | புறச்சமயி |
| கா க | கா | பொருானை | பொருளானை |
| எ௩ | உ0 | புலாலுண | புலாலுண் |
| அச | கஎ | மோலோர் | மேலோர் |
| ,, | உஉ | ராவர்ர் | ராவார் |
| க00 | க | வெறிதற்கு | வேறிதற்கு |
| க0௩ | கூ | சீடைாங் | சீடைாத் |

உ

கணபதிதுணை.

# கொஸமறுத்தல்.



இன்பமாயதருதிடையோங்கவும்
துன்பமாயதுதூரத்துணிங்கவும்
முன்பராபரன்மொய்குழலோடணைந்
தன்பினீன்றதோரானையைப்போற்றுவாம்.

இன்பமாயதருதிடையோங்கவும்-என்றதுயாதொருமனோரசமான நன்மைகள் மேன்மேலுமுண்டாகவும்,—துன்பமாயதுதூரத்துணிங்கவும்.எ-து,தாபத்திறையங்களினாலேவரு மியாதொரு யிடையூறுகளுந்தூரத்தின்கண்ணேநீங்கவும்.—முன்பராபரன்மொய்குழலோடணைந்தன்பி னீன்றதோரானையைப்போற்றுவாம். எ-து-யாவர்க்குமேலானநன்மையினையுடைய சிவன்நெருங்கிய குழலினையுடைய உமாபரமேஸ்பரியையாதியிற்கூடிப்புணர்ந்தா தரவுடனீன்றருளியதொருயானைமுகத்தினையுடைய விக்கினேசுவரனை வழிபடாநின்றேனென்றவாறு.

துன்பந்தூரத்துணிங்கவென்றவதனுற்றம்முடை யமனோவாக்குக் காயத்துத் தோன்ருமல் நீங்கவெ ன்ருனெனக்கொள்க. இன்பமாயதோங்கவும் துன்ப மாயதுநீங்கவுமென்றவதனுலானந்தப்பேறு மஞ்ஞா னத்திழப்புமென்றுமாம் - இதன்கருத்து,—இந்நூல் செய்துமுடிபளவும்விக்கின நிவர்த்தியுண்டாகவுமத ன்மேலு முலகத்தின்கண்ணே குற்றந்தீர்ந்து விளங்க வும்வேண்டி விக்கினகர்த்தாவை வழிபட்டது.

திருமலிபூமகனுதியையவருமாமொருபரமிச்
சிறியனேற்குந்
தருமிருதாட்லைமிசைக்கொண்டஞ்சினர்தீக்
க்றங்கொலைமைதள்ளிச்சார்தற்
கருமறையாகமநெறிசொற்பொருளமைத்
திக்கொலைமறுத்தலறஞ்சொன்மாண்பா
னிருமுணர்விலேனுனாயுநலந்தருமென்
றுளந்துணிந்தீண்டியம்பாநின்றேன்.

திருமலிபூமகனுதிய்ய வருமாமொருபரமிச்சிறிய னேற்குந்தருமிருதாட்லைமிசைக்கொண்டு-எ-து - அ ழகுநிறைந்துள்ள செந்தாமரைமலரின்கட்டோன்றி யபிரமாவாதியாகிய பஞ்சகர்த்தாக்களுந்தானேயா யவர்களையுங்கடந்துசர்வவியாபியாய்வாக்குமனுதீத மாயிருந்துள்ள தற்பரந்தன்னுடையகருணையினுலே

கரசரணாதி யவயவங்களை யுடைய வாசிரியமூர்த்தி யாயிப்பூமியின்கண்ணேயெழுந்தருளிவந் தொன்று க்கும் பற்றுத சிறுமையுடை யேற்கும் பவக்கடனீந் தற்குப்புணையாகக்கொடுத்தருளிய விரண்டு திருவடி களையுமென்புன்றலைமேல் வைத்துகொண்டவற்றின தருளான், — அஞ்சினர்தீக்கறங்கொலைமைதள்ளிச் சார்தற்கு-எ-து-நரகிடைவீழ்தற்கஞ்சுதலையுடையார் யாவரவர்கொலைத்தன்மையாகியவிடுக்கணையப்பாற் படுத்தியறத்தினையடைவான்பொருட்டு,—அருமறை யாகமநெறிசொற் பொருளஃமத்திக் கொலைமறுத்த ல் -எ-து- வேதாகமங்களிற்கொல்லாமைக்கோதியச த்தார்த்தங்கள்பொருந்தச்செய்திந்தக் கொலைமறுத் துலாகியநூலை— அறஞ்சொன்மாண்பாணிருமுணர்வி லேனுரையுநலந்தருமென்றுளந் துணிந்திண்டியம்பா நின்றேன் -எ- து -அறத்தின் பகுதியைக்கூறியமா ட்சிமைபினுலேமிகுந்தவறிவின்மையனாகிய வென்னு டைய புன்மொழியும்பெரியோரவையின்கணன்மை யைத் தருமென்னுமனத்துணிவுடையனாகி யிவ்விடத் து யானறிந்தமாத்திரஞ் சொல்லுகின்றே னென்ற வாறு. (இதன்கருத்து.)கடவுள்வணக்கமுமுதனூ லுமிந்நூலின்பெயரும் விடயபிரயோசனாதிகாரிசம் பந்தமு மவையடக்கமுங்கூறியது தருமிருதாடலைமி சைக்கொண்டென்பதனாற்கடவுள்வணக்கமாயிற்று,

அருமறையாகமநெறியென்பதனுன்முதனூலாயிற்று இக்கொலைமறுத்தலென்பதனூற்பெயராயிற்றுஇந் நூற்குவிடய மாவதுகொல்லாமை - அதுகொலைமை தள்ளியென்பதனுற்பெற்றது,அதிகாரிதீவினைக்கஞ்சி ேனுன் அதுஅஞ்சினர்தீக்கென்பதனுற்பெற்றதுசம்ப ந்தமாவதுசத்தார்த்தங்கள். அதுசொற்பொருளமை த்தென்பதனுற்பெற்றது. அறஞ்சொன்மாண்பானெ ன்னுரையுநலந்தருமென்ற வதனுல் அவையடக்கம் பெற்றது.— அஃதெங்ஙனமெனின் சத்தத்திலேஎழு த்துச் சொற்பொருள் யாப்பலங்கார குற்றங் கள் பொருந்தினும்அர்த்தத்தில்வேதாகமவிருத் தமாயினு முடிவின்கணெவ்விதத்தாயினும்வேதாகமசித்தமாகி யகொல்லாமையைச் சாதித்தலின் பெரியோரிகழா வொன்றுரைத்ததென் போலுமெனின் - திருவள்ளுவ ர்,— பொய்மையும்வாய்மையிடத்தபுரைதீர்ந்த-நன் மைபயக்கு மெனின், என்றபிரமாணம்போலுமென க்கொள்க. (க)

{ மேலிந்தச்சாத்திரம் விளங்குதற்கு
ஒருபீடிகாத்தம் பனங் கூறுகின்றூர், }

எடுத்துளவெச்சமயிகளு முலகருஞ்சாரோ
ரவையினிடையிற்ருேன்று
முடுத்தனைச்சூழ்தரவிளங்குமதியினுயர்
சைவனாவந்தொருவன்ருழ்ந்தீண்

டடுத்தபலவுயிர்தோற்றத்துயர்வுதாழ்
வருளுகெனவவனைத்தேற்றித்
தடுத்தபுறச்சமயிகட்குத்தரமுறுத்தி
நிறுத்துகின்றார்தம்பாலூற்றம்

எடுத்துளவெச்சமயிகளுமுலகருஞ்சாரோரவையி னிடையிற்றோன்று- முடுத்தனைச்சூழ்தரவிளங்குமதி யினுயர்சைவரைவந்தொருவன்றாழ்ந்து,எ-து,வேதா கமங்களில்பூர்வமீமாஞ்சர்,உத்தரமீமாஞ்சர், சேசுர சாங்கியர்-காபிலயோகர் - வைகாநசவயிணவர்-சை வராதியாகியஉட்சமயிகளென்றும், உலகாயுதன்-ச மணன் - புத்தன் - காளாமுகி - வாமி - வயிரவன்- பாஞ்சராத்திரி - வேதவிருத்த பாசுபதி - மகாவிரதி யாதியாகிய புறச்சமயிகளென்றுமெடுத்துச் சொல் லப்பட்ட பலசமயவாதிகளு மிச்சமயங்களில் விரி வாகத்தோன்றிய கற்பனைசமயிகளு மிவர்களல்லா தலவுகி கருங்கூடி யிருந்துள்ள வொருபெரியசபை யின் கண்ணே நட்சத்திர கணங்கடன்னைச் சூழநடு வே விளங்கும் பூரணச்சந்திரனைப் போலத் தோ ன்றாநிற்கு மொரு சைவா சாரியனை யொருபக்கு வியானவன் வந்து தெண்டன் பண்ணி யெழுந் தஞ் சலியஸ்தனாய்நின்று, — ஈண்டடுத்த பலவுயிர் தோ ற்றத் துயர்வு தாழ் வருளுகென வவனைத் தேற்றி- எது - இவ்வுலகின்கண்ணே யுள்ளநாலு பேதமாகிய

சீவ யோனி களில் ஒன்றுக் கொன்று அதிகமுந்தா ழ்வு மாயிருக் குமோ வெல்லாஞ் சமமா யிருக்கு மோ தேவரீர்திருவுளம்பற்றி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யஅவனிருதயஞ்சம்மதம் வரும்ப டிக்கு வேதாகமங்களி லுள்ளபடியே கூறித் தெளி விக்குமளவில்,—தடுத்தபுறச்சமயிகட்குத் தரமுறுத் திநிறுத்துகின்றார் தம்பாலூற்றம் -எது- அப் படிநீர் சொல்லுகிறது கூடாதென்றுதடுத்துக்கூறியப் புறச் சமயிகளுக்கு எதிருத்தரமு முதாரணங்களும் அச்ச பையினிருந்துள்ளஆபாலபண்டிதராகிய சர்வசனங் களுக்குஞ்சம்மதம்வரும்படியே யுத்தியுக்தமாகவெ டுத்துக்காட்டித் தம்மிடத்தி லுண்டாகிய நிலைமை யைத் தாபிக்கின்றாரென்ற வாறு —(இ-து)சகலசம யங்களுக்குள்ளுஞ் சைவசித்தாந்த மதிகமென்றும வற்றினுண்டாகிய வாக்கியம் வேதாந்த சாரமாகை யால் அதுவேபிரமாணமென்றுங் கூறியது, - (உ)

{ மேலிந்தவுலகத்தின் கண்ணேயுண்டாகிய
விருவகைத் தோற்றமுமவற்றுளுயர்
வுதாழ்வுகளுங்கூறுகின்றார் }

ஊற்றமிகுஞ்சராசரத்துளுயர்ச்சிசரஞ்சரத்
துணரர்நரர்தம்முள்ளு
மேற்றமுந்தாழ்ச்சியுமுளபல்லுயிர்செகுத்
துண்டுடலைவளர்த்திடுங்கீழ்ம்மேற்

சாற்றுமுயிர்க்கொலைபுரிதறுயர்நெடுநா
ளென்றுமுடறுன்பொய்யென்றுந்
தேற்றமிக்கென்றுயிர்தனைமவீட்டினுமவ
ற்றினுயிர்புரக்குந்தீதிலோரோ

ஊற்றமிகுஞ் சராசரத்து ளுயர்ச்சிசரம்-ஏ:து-ஊற்றத்தினை யொன்றுக் கொன்றதிக மாகவுடைய தாபரசங்கமங்களென்று சொல்லப்பட்ட விருவகை த்தோற்றத்தினுளறிவினுயர்ச்சியினுலே தாபரங்களி னுஞ்சங்கமமேயதிகமென்று சொல்லப்படும்—சரத் துணரர். எது - அச்சரங்களினுள்ளுமறிவினுயர்ச்சி யானமனிதரையதிகமென்று சொல்லப்படும் ஆகார நித்திரைமைதுனம்பய மெல்லாச் சரங்களுக்குஞ் சமமா யிருக்கமனிதரையதிகமென் றதெப்படியென் னில்அப்படியாகாராதி மிருகங்களுக் குண்டாயினும் அவற்றுள்ளுமனிதர்பால்விசேடத்தன்மையுண்டுஅஃ தெங்ஙன மெனின் கார்த்தல் புளித்தல் துவர்த்தல் உவர்த்தல் கைத்தல் தித்தித்தலாகிய அறுசுவைப தார்த்தங்களுந் திவ்வியாமுதமாகிய போசனங்கள் அறிந்துபொசித்தலுஞ் சிறக்கவொப்பனை செய்ததூ ங்குமஞ்சத்தின்கண்ணே நுண்ணியபஞ்சுபெய்தமெ த்தையின்மேல்தலைகணிமுதலாகிய கொட்டைகளும் பரப்பிச்சிறந்தபட்டுவிதானத்தின்கீழ்நித்திரை செய் குதலும்ஆலிங்கனமாதியாகியவறுபத்து நாலுகரண

ங்களுடன் ஸ்ரீகிரீடைபண்ணுதலும் மனோவிசாரத்தின் மிகுதியாலச்சமடைந்த காலையினுந் தேறியதற்கேற்றவுபாயஞ்செய்து துயரநீக்கிக்கொள்ளுதலுமிருகாதிகளுக்கின்மையால் அவற்றுள்ளுமனித ரதிகமெனக்கொள்க. இதற்கு பிரமாணம் அருட்பிரகாசம் ஆறுசுவையோ டருந்துத லுண் பஞ்சணை துயிறல், கூறுகரணவிதங்களின்மாதனைக்கூடிடுதே, றேறிவிசாரத்தினனச்சநீங்குதறேறின்மண்மேல்,வேறுமுயிர்கடமக்கின்மையானரர் மேலென்பவே—என்றுமற்றும்வருவனவற்றுற் காண்க: -
இதுவன்றியுமிருகாதிகளுக்கின் மையாகியநாணுடைமையும் மனிதருக்குளதாதலினும் விசேடமெனக்கொள்க. இதற்குபிரமாணம் திருவள்ருவர். ஊணுடையெச்சமுயிர்க்கெல்லாம்வேறல்ல, நாணுடைமைமாந்தர்சிறப்பு.—என்று மற்றும் வருவனவற்றுற்காண்க—நரர்தம்முள்ளு மேற்றமுந்தாழ்ச்சியுமுள-எ-து - இங்ஙனமுயர்ச்சியென்றுகூறப்பட்டமனிதருள்ளுமுயர்ந்தோர்களுந்தாழ்ந்தோர்களுமுண்டு- அங்ஙனமாயினுயர்ந்தோர்யாவர்தாழ்ந்தோர்யாவரொனின் பல்லுயிர்செகுத்துண் டுடலைவளர்த்திடுங்கீழ் எ-து- விவேகத்தையுடைய மனிதராகத் தோன்றிய மற்றுமுண்டாகியபலவுயிர்களையுங்கொன்ற வற்றினூனையருந்தித்தமதுமலவுடலை வளர்க்கா நிற்பர்கள்கீழோர்

அம்மேற்சாற்று முயிர்க்கொலை புரித றுயர்நெடுநா ளென்றுமுடரும் பொய்யென் றுந்தேற்றமிக்கென் றுயிர்தமைவீட்டினுமவற் றினுயிர்புரக்குந் தீதிலோ ரே. எ-து - அழகியமேலோராவார்உலகின்கட்சொல் லப்பட்டயாதொருசீவ சொலைகளையாயினும்பண்ணு மிடத்து அக்கொலைமை யானது ஆன்மாசித்தியஞத லால் அநேககாலந்தொடர்ந்து துக்கத்தை விளக்கு மென்று மிச்சரீரவாழ்க்கை அநித்தம்இதனைநாங்கா ப்பதற்கெண்ணுதல் நீர்க்குமிழினுக்குப் பூண்கட்டநி னைந்ததொரு பேதையையொக்கும்ஆதலினிதனைக்கு றித்து நம்மைநெடுநாள்வருத்துவ தொருசீவகொலை யைப்பண்ண வொண்ணு தென்றுந் தமதிதயத்தின் கட்டோன்று மறிவினது வலியாலறிவினைமிகுதியுமு டையார் ஓர்சீவனுற்றமது சரீரஆனிவ ருமிடத்தும் அதினுடையசரீரத்திற்கொரு ஆனிபண்ணமல்காக்கு ந்துற்றமற்ற நல்லோர்களென்றவாறு. இதற்குப்பி ரமாணம்திருவள்ளுவர். தன்னுயிர்நீப்பினுஞ்செய்ய ற்கதான்பிறி, தின்னுயிர்நீக்கும்வினை—என்றுங்-காசி காண்டம், பிறரிடையின்ற வியற்றி டிற்றமக்குப் பிழைப்பறவெய்துமென்பதனை-யறிகுனரறிஞராத லாலுயிர்களனைத்தையுந்தம்முயிர்போல,நெறியினிற் கருத லினியவாமைந்து புலனையுநெறியலாவழியிற். பொறியினிற்செலுத்தா தடக்கல் நன்குணர்ந்தோர்

புலமையோரொழுக்கெனப்புகல்வார்—என்றுமற்று
ம்வருவன வற்றுற்காண்க. — இதன் கட்டேற்றமிக்
கென்பதனுல் உயர்ச்சிதாழ்ச்சியறிவைப்பற்றிநின்ற
தெனக்கொள்கஇதன்கருத்து சராசரபேதங்களின்
மனிதரோ யதிகமென்றும் அவருள்ளுஞ் சீவகொலை
பண்ணுதவர்களேயுயர்ந்தோரொன்றுங்கூறியது. (௩)

{ மேற்சீவ கொலைசெய்த மையான்வருந்
தாழ் வேதெ ன்று கூறிய வுலகாயுதனை
நோக்கி யுத்தரங் கூறு கின்றுர். }

இங்ஙனம் வாதிகள்வினு-யாப்பின்கட்கூறுமை
யின்கற்பனையே யிங்ஙனமன்று-இன்னூல்அவாயநிலை
ப்பொருள். அஃதாவது வினுவினைக்காட்டுவதாகிய
விடையமாத்திரம் கூறுவது ஆதலின்விடை யினுக்கி
சைந்த வினு வினை யுரையின் கண் வருவித் த
தெனக்கொள்க.

தீயவினைத்தலைகொலைமாதுயர்தரும்பின்
புண்மைதொன்னூறெறித்தவாற்றீ
டாயவொரோவினைகளிகத்தினுமுறலாற்
பலமருந்தற்கங்கோரங்க
மேயுமதிற்பாயுமிதிலறிவுருவேறிவண்புகலு
முளதியாமுங்
காயமிதுகிடப்பமற்ருேருடல்கனவிற்
றினம்புகலோர்காதையன்றே.

தீயவினைத்தலைகொலை-எ-து - கொலையானதுவொருவன் செய்யுந் தீவினையாகிய வோருருவிற்குத்தலையென்னப் படும். அஃதெத்தா லென்னில் - பாருக்கு இதஞ் செய்கு தலே புண்ணியமும் அகிதஞ்செய்குதலே பாவமுமென்று அறநூல்களெல்லாம் ஓதுதலின் கொலைமைக்கு மேம்பட்டபாவம் அதிகமின்மையின் கொலைமையே பாவத்துக்கெல்லாம் முதன்மையெனப்படும் ஆதலிற் கொல்லாமையே புண்ணியத்துக்கெல்லா முதன்மையென்பது மாயிற்று. இதற்குப் பிரமாணம்-திருவள்ளுவர். அறவினையாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும், என்றும் - திருப்பாட்டு, நல்ல நினைப்பொழிய நாள்களிலாருயிரைக், கொல்ல நினைப்பனவுங் குற்றமு மற்றொழியச், செல்லவயற்கழனித்தென் திருவாரூர்புக், . கெல்லைநினைத்தடியே னென்றுகொலெய்துவதே.— அன்றியும், கொன்று செய்த கொடுமையாற் பலசொல்லவே, நின்றபாவவினைகடாம்பல நீங்கவே, சென்று சென்று தொழுமின்றேவர் பிரானிடங்; கன்றினோடுபிடி சூழ்தண் கழுக்குன்றமே.—என்றும் சிவஞானதீபம். கொலையாதிநெறியகன்ற ஞானந்தானே கூறரியமேலான ஞானமாகுங், கொலையாதி யகன்றொழுகுந் தவங்கடானே குற்றமில்லா நற்றவ மென் றுரைக்கு நூலுங்

கொலையாதியகற்றிய நல்லறங்கடானே குவலையற்றி லொப் பரியவறங் களாகுங், கொலை யாதி யகன்று பெறுஞ் செல்வந்தானே கூறி லுயிர்க்கிதமான வாழ்வதாமே - என்றும் - சிதம் பரபுராணம் - வருணமெண்ணிலவுள் வேதமறை யவருயர்ந்தோர்நீதி, யருளுமாச்சிரமந் தன்னிற்றுறந்தவரதிகரொன்ப-பெருகியவறத்திற்கொல்லாப்பேரறம் பெரிதுநன்கு-தருபவாவருட்டக்க தேசிகர்தலைவராவார் என்றும் - இதியாசம்-ஆனையடியிலடங்காவடியில்லைத்,தானதுபோனிற் கின்ற தன்மைதா - னுனுயிரைக்-கொல்லாவறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு, மெல்லாவறமுமிசைந்து, என்றுமற்றும்வருவனவற்றுற்காண்க-மேல்வினு - இங்ஙனம் -கொலைமையான் வரும்பாவமானது என்செய்யும் மேல்விடை மாதுயர்தரும்-எது. நெடுநாணீங்குதற் கரிதாகிய மகத்துவ முடையதுன்பத்தைத் தரும் - மேல்வினு - இங்ங னொருவன் கொலைசெய்த வுடனே யவற்றினுல் வருந் துன்பத்தை யனுபவிக்கக் கண்டிலேம் - மேல்விடை - இம்மையிற் சிலகொலைகளைப் பண்ணினவன் இம்மையிற்றுயரங்களை யனுபவியாவிடினுஞ் சரீராந்தியத்தில் நரகத்தையடைந்து மகாதுயரங்களை யனுபவித்துப் பின்னு நரகசேடத்திலுற் பூமியின்கண்ணே தோன்றியந்த சேடபலமாகிய துக்கங்களையும் இவ்விடத்

திலேஅனுபவிப்பானென்பதேநிச்சயம், அதென்போ லவென்னில் - ஒருவேளாமை செய்தவனுக்கு அந்த பலமானது காலாவாதியிற்புசிப்புமாய் மேலைக்குவி த்துமானதுபோல வெனக்கொள்க. இதற்குப்பிர மாணம்-சிவஞானசித்தி. மேலைக்குவித்துமாகிவிளை ந்தவையுணவுமாகி, ஞாலத்துவருமாபோலநாஞ்செ யும் வினைகளெல்லா, மேலைத்தான் பலமாச் செய்யு மிதம இதங்கட்கெல்லா, மூலத்ததாகியென்றும் வந் திடு முறைமையோடே: — என்று மற்றும் வருவன வற்றுற்காண்க. இம்மையிற் செய்த கொலையானது சரீராந்தியத்தி னரகத்தில் வருத்து மென்பதற்குப் பிரமாணம். திருவள்ளுவர் - உயிருடம்பி னீக்கியா ரென்பர் - செயிருடம்பிற் செல்லாத் தீவாழ்க் கை யவர். அன்றியும்- கொல்லாமைமேற் கொண்டொ ழுகுவான் வாழ்னுண்மேற் செல்லாது யிருண்ணுங் கூற்று - என்றும் - திருமந்திரம் - கொல்லிடுகுத்தெ ன்று கூறியமாக்களை, வல்லிடிகாரர் வரிகயிற்றுற்க ட்டிச், செல்லிடு நீரொன்று தீவாய் நரகிடை. நில் லிடுமென்று நிறுத்துவர் தாமே — என்றும், சிவத ருமோத்திரம், உற்றிடுவருணாத்த துயரனைத் தினையு முயிரிரக்க, மற்றுவதைத்தவைதன்னை யவலமெனுத வற்றானைத், துற்றினரு மற்றுமுள கொலைபுரிந்த து ரிசனரும், பற்றுமிலா படுந்துயர்க்குக்கடுந் துதர்வ

லிப்பட்டே — என்றும் - சிவஞான தீபம் எவ்வுயி
ரும் பராபரன் சந்நிதியதாகு - மிலங்கு முயிருடல
னைத்து மீசன்கோயி, லெவ்வுயிருமெம் முயிர்போ
லென்றுநோக்கி - யிரங்காது கொன்றருந்துமிழிவி
ஞேரை, வவ்வியமதூதராருந்தண்டஞ்செய்து - வல்
லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து, வெவ்விய
தீயெழு நரகில் வீழ்த்திமாறு - வேதனை செய்திடுவ
ரென வோதுநூலே.—என்றும் - இதியாசம் - இன்
ஞெய் நமக்குண்டென் றெண்ணுதே யெவ் வுயிரு.
முன்ஞெவக் கொன் றுண்ணு மூர்க்கர்தா - னென்
ஞெவும், பண்ணப்படுநரகிற் பாவிகளிற் பாவிகளெ
ன், றெண்ணப் படுவா ரிசைந்து — என்றுமற்றும்
வருவனவற்ருற்காண்க. நரகசேடமானதுமறுசென்
மத்திலுந் துக்கந்தரு மென்பதற்குப் பிரமாணம். சி
வதருமோத்திரம். கருவினுள்ளழிவன் முற்றிக்கழி
ந்துடனழிவன் காளைப், பருவமுற்றழிவ னீகைபகர்
ந்துபின்னுதவாப்பாவி, பெருவலைக்] கண்ணியாலும்
பிடித்துயிர் வதைத்தபேதை, கருதிய பொருளைத்த
க்கோர்க்குதவிடான் றிளைத்தகையன் — அன்றியும்-
அவயவமனைத்துங்குன்றி யழிந்திடுமாக்கையாருன்,
சுவையினைவிரும்பி யுண்டதுட்டர்கள் சோலைதன்னை
த், திவலையதிரைநீர் தேங்குந் திண்ணிய தீரந்தன்
னை, யவமதியாலே சாலவழித்திடு மற்பர்தாமும் —

என்றும் - நாலடி - இரும்பார்க்குங்காலராயேதிலா ர்க்காளாய், கரும்பார்கழனியிற்சேர்வர், சுரும்பார்க்குங் காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும் பூழுங், கூட்டுளாய்க்கொண்டுவைப்பார்- அன்றியும், அக்கே போலங்கை யொழிய விரலழுகித், துக்கத் தொழு நோயெழுபவே - யக்கால், அலவனைக் காதலித்துக் கான்முறித் துத்தின்ற, பழவினை வந்தடைந் தக்கால். — என்றுமற்றும் வருவனவற்றுற்காண்க. மேல்வினு-அப்படி கொலைத் தீமைகளைப் பண்ணினவன் சென்மாந்திரத்தில் நரகத்தை அனுபவித்து நரகசேடத்தான் மறுசென்மத்திலுந் துன்பத்தை அனுபவிப்பனென்று துணிந்ததெத்தாலென்னில் - மேல்விடை- உண்மை தொன்னூ றெரித்தவாற் றீடாய வொரோ விலைகளிகத்திலுமுறலால் - எது-ஒருவன்செய்தவலி யதீவினைகளானதுமறுமைக்கண்வந்துநரகத்தழுத்து மாயினும்இம்மையிலேயும் வருத்துவதாகியதன்னுடே வேகத்தைக் காட்டுமென்று மறைமொழி கூறுகை யால் அவ்வுரையின்படியே மிகுத்தபாவத்தின் வேகமானது செய்தவுடனே ஒருத்தனைவருத்தக் காணுதலின்மறுமைக்கண்நரகத்தழுத்துமென்ப தேசத்தியம் - வேகமாவது யாதெனின் விஷத்தை யுண்டானொருவனை யந்தவிஷமானது வருத்திக் கொல்லுதலின்முன்பே நெடிவுதோன்றுதல் போலும்,நெருப்

பிறாற் சூடுண்டா னொருவனுக்கு அது புண்ணாவதன் முன்பேயெரிதல் போலும், சிவத்துரோகாதி அதி பாதகமும் பிரமகத்தியாதி மகாபாதகமும் மறுமைக்கண் எரிவாய் நரகமாதிய நரகத்தழுத்துதலின்முன்பேஇம்மையிற் செய்தவுடனே சித்தப் பிரமையாதி துக்கங்களும், பிரமகத்தி யாதிதுக் கங்களும் அடைதலினெனக்கொள்க. — இதற்குப்பிரமாணம்-திருப்பாட்டு-குற்றொருவரைக்கூறைகொண்டுகொலைகள்சூழ்ந்தகளவெலாஞ், செற்றொருவரைச்செய்த தீமைகளிம்மையேவருந்திண்ணமே. மற்றொருவரைப் பற்றிலேன்மறவாதொழிமடநெஞ்சமேபுற்றரவுடைப் பெற்றமேறிப்புறம்பியந்தொழப்போதுமே—என்றும் - சசிவன்னபோதம் - மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின் பயன்வேறொருகாலமுறா, திகமேவருமென் பதனாலுளநோயெல்லாமிவனைச்செறவெய்தினவே.— என்றுமற்றும் வருவனவற்றாற்காண்க — மேல்வினா - அப்படியிம்மைக்கண்ணொருபாவத்தைச்செய்தவன்சரீராந்தியத்தில் நரகத்தையனுபவிப்பா னென்றுநீர்சொல்லுகிறது கூடாது. அஃதெத்தா லென்னில் இவ் விடத்திற் பாவாதி களைச் செய் தவன் இறந்து போய் அவ னையுந் தகனம் பண்ணிப் போடக் காண்கை யால் - மேல்விடை பலமருந்தற் கங்கோரங் கமேயும் - எது - யாதொரு

புண்ணிய பாவங்களைப் பண்ணினவன் அவற்றினது பலன்களைச் சொற்க நரகத்தின் கண்ணே அனுபவித்தற்குச் சரீராந் தியத்திற் பாவப் பருவ மாறாற் பூத தேகமும் புண்ணிய பருவ மாறாற் பூதசார தேகமும் யமதூதர் ஒரு கணத்திலே உண்டு பண்ணுவார்கள். அந்த சரீரஞ் சுக துக்கானுபவத்தைப் பொருந்தும் - இதற்குப் பிரமாணம் - சிவதருமோத்திரம் - அருந்துயர்க் குழியி னாழ்வா ராகமேபாவத்தாகும், பொருந்திய பூதத்தாலே யிமைத்திடும் போது தன்னுட், புரிந்து விண் புகுவராகம் புண்ணியத் தாலே யாகும், பொருந்திய பூதசாரத்தொரு கணப் பொழுது தன்னில். — என்றுமற்றும் வருவன வற்றுற்காண்க - மேல்வினா - ஒருவன் இம்மையிலே செய்த பாவத்துக் கேதுவாய் மறுமையிலே ஒரு சரீரத்தை உண்டுபண்ணி நரகத்தில் வாதிப்பபொன்பது எற்றினுக் கொக்கு மென்னில் குற்றஞ் செய்தவன் தப் பிப்போகக் குறுக்கே வந்தவனை வாய்மேல் அடித்தா னென்பது போலும் ஒருவன் பசிக்கு மற்றொருவனுண்டானெ ன்பதுபோலும் இப்படி அனேகமாக வுலகத்தின் கண்ணே சொல்லும் பரியாச வார்த்தைகளுக் கொக்கும் இந்த சரீரஞ்செய்த பாவத்துக்கு அந்த சரீரம் வாதைப் படுமென்றீர் அதற்கு மிதற்குஞ் சம்பந்தமேது, மேல்விடை,

அதிற்பாயுமிதிலறிவு எது - அந்தச் சரீரத்தின்கட்செ ன்று புகுதும் இந்தச் சரீரத்தினின்றும் புண்ணிய பாவங்களுக் கேதுவாகி இதா கிதங்களைப் பண்ணி னவன் அறிவு - இதற்குப் பிரமாணம் - சிவதருமோ த்திரம் - திரனுறுசெளுகைபோற் சீவன் தீண்டியே, வருமுருவதனை முன் னுடலை மாற்றிடுந், தருமமேப ருவமேற் சாரும் வானினை - பருவமேற்றீவினைநிரை யம்பற்றுமே, மேல்வினு - அப்படி ஒருசரீரத்தின் கண்ணே மற்றொரு சரீரத்தின் கணுண்டாகிய அறி வுசென்று புகுமென்னு மிடத்துத் தருணபருவத்தை யிச்சித்துடைய ஒருவிருத்தன் ஒருதருண பருவன் மிறக்கக்கண்ட விடத்து அவனது சரீரத்திற் பாய்த ல்வேண்டும் அஃதில்லாமையின் ஒருசரீரத்தின் அ றிவு மற்றொருசரீரத்திற் புகுமென்றல் கூடாது. மே ல்விடை, உருவேறிவண்புகலுமுளதியாமும் - எது- இவ்விடத்தும் பரகாயபிரவேசம் பண்ணுவாருமுண் டு. மேல்வினு அப்படிப் பரகாயப் பிரவேசம் பண் ணுதல் - இவ்விடத்து நாங்கண்டேமில்லை - அதுவும் அம்மி பறக்கக்கண்டேன் - என்பதுபோலும் உலக கற்பனைகதை - மேல்விடை - காயமிது கிடப்ப மற் றொருடல் கனவிற்றினம் புகலோர்காதையன்றே. — எது - அப்படி பரகாயப் பிரவேசம் பண்ணுதல் - இ ப்பொழுது இவ்விடத்திற் காணுமையால் கற்பனை

கதையென் றுயாயினும் நாடோறும் யாமெல்லோரு ஞ் சொற்பனத்தின் கண்ணே இந்த தேகத்தைவிட் டு வேறொரு தேகத்திற் பாய்ந்து எவ்விடத்துஞ் சஞ் சரித்தலால் ஒரு சரீரத்தின் கண் இருந்துள அறிவு மற்றொருசரீரத்தின் கட் கன் மத்தாற்சென்று புகு மென்பதேயுண்மை யென்றறிவாயாக' இதற்குப்பிர மாணம் - சிவஞானசித்தி - பன்னகமண்ட சங்கள் பரகாயந்தன்னிற் பாய்வோர் - துன்னுதோன்முட் டையாக்கைத்துறந்து செல் வதுவேபோல - வுன்னி யவுயிர்கலே வுடல்விட்டு வானினூடு - மன்னிடுநன வுமாறிக்கனவினை மருவுமாபோல்—என்றும் திரும ந்திரம், நாகமுடலுயிர் போலுநல்லண்டசம் - போ குநனவை கனவின் மறத்தல் போல். ஆகுமரனரு ளாற்சென்றருவினைக் - கேகுமிடஞ்சென் றிருபயனு ண்மையே—அன்றியும் - காயுங்கடும் பரிகால்வைத் து வாங்கல்போற் - சேயுமிடஞ் சென்றுலவும்வல்ல து - வோயுந்துகிற்போல் வொன்றைவிட் டங்கொ ன்றி லேயுமவனொன்ன வெய்திடுங் காயமே,—என் றும் - சொற்பனத்தியங்கு காயஞ்சூக்கு மங்கதனுற் றுய்க்கு - நற்பயன்றுறக்கங் கான்பநரகு பின்னன வைச்சார்தல் - உற்பவ மிவை கணிங்கி யொன்றை யுமுணராயாகி, நிற்பன சுழுத்திமேல்வை நிகழ்வசு ங்காரம் போலும். — என்றுமற்றும் மருவனவற்று

ற்காண்க, — இதன்கருத்து - கொலைத்தீமை யுடை யார் நரக மனுபவிக்கு மிடத்துத் தத்தம் பாவத்தள விற்குத்தக்க அவ்விடத்துண்டாகிய ஒரு பூததேகத் தைப் பொருந்துவரொன்றுசாதித்தது. (௪)

{ இப்படி கூறிய சைவ சித்தாந்தியைநோக்
கிப்பின்னும் உலகாயுதன் கூறுகின்றான் }

சொற்பனத்தின் கண் வேறொரு சரீரம் வந்து பொருந்துமென்ற வார்த்தை பழுது, கனவிற் றோ ன்றுவதெல்லா நனவின் கட்கண்ட நினைவாகு மெ ன்ற வார்த்தைக் குத்திரங் கூறுகின்றார்.

காதறருமுரு விதுவான் பறத்தலின் றுங்கதற் கியல்
பாய்க் காண்டலானும்
போதுறைவோ னுதியர்கண் முகமாதி கனவிலியாம்
பொருந்தாதானும்
ஓதுநினைவலவுணர் வாருயிர்க் குணமிவ் வுடல்பிணத்
தொன்றுணரக்காணேம்
வாதமுளதிலை யுறக்கத் துணர் வுணர்வ துயிரெனக்
கொண்மதித் தேசில்லோய்.

காதறரு முருவிது வான்பறத்தலின் றுங்கதற் கியல்பாய்க் காண்டலானும் - போதுறைவோ னுதி யர்கண் முகமாதி கனவிலியாம் பொருந்தா தானு

மோதுநினைவலை. — இவ்விடத்து நம்மா லிச்சிக்கப்பட்ட யிந்தச்சரீரத்துக்கு ஒருக்காலும் ஆகாயத்திற் பறக்குந் தன்மை யின்மையானுங் கனவின் கட்டோன்றிய சரீரத்துக்கு ஆகாயத்திற் பறக்குதல் இயல்பாய்ப் புதுமையும் அதிசயமுந் தோன்றக் காண்டலினாலும் பிரமாவாதியாகிய தேவதைகளுக் குண்டாகியபலமுகமாதியவுறுப்புகள் நமக்குக் கனவின் கண் உண்டாகாமை யானுஞ் சொற்பன தேகத்தை இச்சரீரத்தின் கண் கண்டு கேட்டிருந்தமையால் அந்த நினைவென்குதல் கூடாது - அதெப்படியென்னில் சொற்பன தேகம் பறக்கக்காண்கையால் இத்தேகத்துக்கு அஃதில்லாமை யாற் கண்ட நினைவல்ல. அல்லது தேவதைகள் ஆகாயகவனம் பண்ணுவார்களென்று கதைகளிற் கேட்ட நினைவென்னில் - புராணகாவியங்களில் பிரமாவாதி தேவதைகளுக்கு அநேகமுகங்களும் அநேகங்கண்களும் அநேகங்கைகளும் உண்டென்று கேட்டிருக்கின்றோம், ஆகையால் அவ்வடிவமு நமக்குச் சொற்பனத்தின் கட் பொருந்தல் வேண்டுமே அஃதில்லாமையாற் கேட்டநினைவும் அல்ல. ஆதலிற் சொற்பனத்தின் கண் வேறொருதேகம் வருமென்பதே சத்தியம். இதற்குப் பிரமாணம். இவ்வுடல் கனவூடெங்கு மியங்குருவல வன்றென்பர் - அவ்வுடல் பறத்தலாற் கண்டுளநினை

வல்லவாகும் - யெவ்வ மில்லிமையோர் கேள்வி நி னைவெனி லிந்திராதி - திவ்விய வுருக்கொளே மாற் றிகழ்ந்ததவ் வுருவேறென்னே என்றுமற்றும் வரு வனவற்றுற்காண்க - மேல்வினு. அப்படிசொற் பன த்தின்கண் இவ்விடத்திற் காணுதன கண்டேமாயினு ம் அதுவும் இத்தேகத்தின் குணமல்லது வேறொரு தேகமென்பது கூடாது - ஆதலின் ஒருதேகத்தின் குண மற்றொரு தேகத்தின் கட்சென்று பொருந்து வதே யில்லை உண்டென்னில் ஒருரத்ந சலத்தில் அத னது காந்தி மற்றொரு ரத்நத்திற் சென்று பொருந்த வேண்டும் - அஃதின்மையால் இச்சரீராங் கியத்தில் இதனுடைய குணமாகிய அறிவு வேறொரு தேகத்திற்சென்று புகுவது மில்லை. மேல்விடை - உணர்வாருயிர்க்குணம். எது - நீயொன்றின் குண ம் ஒன்றிற் சென்று புகாதென்பது ஒக்கும். இங்ஙு னமுண்டாகியஅறிவு இத்தேகத்தின்குணமன்று இத் தேகத்தின் கட்கன்மவசத்தாற் பொருந்தியிருந்துள ஓரான் மாவினுடைய குணம் மேல்வினு - நீர் இங் ஙனம் இத்தேகத்தின் கண் [illegible]தற்கு அன்னியமாய் ஒரு [illegible]வனுண் டென்பது கூடாது - அதே னெனில் இங்ஙனம் காணப்பட்டுள்ள பிருதிவி - அப்பு - தே யு - வாயுவென்னும் இந் நாற்பூதமும் நித்தியமாயு ள்ளது - அவற்றுள் வாயுசலன குணத்தை யுடையது

ஆகையால் மற்றுள பூதங்கட்கு அவற் ருேடுகல ப்புண்டாகுதலின் இச்சரீராதிகள் தோன்றும் - அ ப்படி தோன்றித்தென்பது எத்தாற்கண்ட தென்னி ல் மண்கடினமாயிருத்தல் போலுஞ் சரீரத்தில் என் புதோலாதிகள் கடினமாய் மலந் தடித்து வீழ்தலினு லுஞ் சலமல நெகிழ்ந்து பதஞ் செய்தலின் இரதாதி கள் நெகிழ்ச்சி யுடைத்தாய்ச் சலம்வீழ்தலி னுலும் நெருப்புச்சுட் டொன்று வித்தலின் வுதராக்கினியன் னபானுதிகளைச்சுட்டொன்றுவித்துத்தொக்கின்கண் வெதுப்புத்தோன்று தலினுலும் வாயுச்சலித்துத்திர ட்டுதலின் இச்சரீரத்தை யோடுதலாதி சலனத்தைப் பண்ணி நாசியாதிகளின் இயங்கக் காணுதலினுலும் அந்தப்பூதக்கலப்பு இந்தச்சரீர மென்பது பிரத்தி யட்சம் பாக்குவெத்திலைசுண்ணும்பு மூன்றுங்கூடின விடத்தில் ஒருசிவப்புத் தோன்றுதல் போலும் பூத சையோகத்தினுல் முன்பில்லாதமனமுந் தோன்றும் இதுவன்றி நீர்இந்தச்சரீரத்தில் ஒருஆன்மா வுண் டென்னில் இப்படி பிரத்தியட்ச மாகக்காணவேண் டும் - அப்படிகாணப்படாமையின் ஆகாசத்தாமரை ப்பூவும் முயற்கொம்பும் ஆமைமயிரும் மணலிற்றயி லமும் உண்டென்பதை யொக்கும் - ஆதலின் ஆன் மாவுண்டென்பதேயில்லை - இவ்விடத்துத் தோன்று முணர்வெல்லாந் தேககுணமே மேல்விடை - இவ்வு

டல் பிணத்தொன்றுணரக் காணேம்,—எது-நீயிந்த த்தேகத்தின் குணம் அறிவென்னு மிடத்துப் பிண மான அவதரத்திற் றேகங் கிடக்கக் கண்டேம் - உணர்வு அங்ஙனங் கண்டிலேம் - ஆதலின் உணர்வு தேகத்தின் குணமென்பது கூடாது மேல்வினு - பிணமான சரீரத்தில் வாயுநீங்குதலால் அக்கினியவியும் - அப்பொழுது அறிவுங்கெடும் - அவைகள் நீங்கியது எவ்விதத்தாற் கண்ட தென்னில் பிணத்தினுசியிற்காற்றுங் கண்டிலேம் - தோக்கில் வெதுப்பமுங் கண்டிலேம் - ஆதலின் அவைகள் நீங்கியதுஉண்மை நீங்குதலின் சரீரத்தின் கண் அறியாமையடையும் மேல்விடை - வாதமுளதிலை யுறக்கத் துணர்வுணர்வ துயிரெனக் கொண்மதித்தே சில்லோய் எது - நீயிங்ஙனம் பிணமானகாலையில் நீங்குமென்றவாயு வுறக்கத்தின்கண் நீங்காமை யிருக்கவும் அப்பொழுது தேகத்தின்கட் பாம்பேறி வருதலுஞ் சத்துருவருதலுஞ் சரீரம் அறியாமை கிடத்தலால் வாயுநீங்க அறிவுகெடு மென்பது கூடாது ஆதலிற் கன்மவசத்தால் அவத்தைகடோறும் ஒடுங்கியும் உணர்ந்தும்வருவானோர் ஆன்மாவுள னென்றறிவாய் ஞானப் பிரகாசமன்றி யிருளடைந்த புத்தியினையுடையோ யென்றவாறு. இதற்குப் பிரமாணம்- சிவஞானசித்தி — உடலின் வேறுயிரோனிந்த வுடலன்

ரூ வுணர்வதென்னி, னுடல் சவமான போது முட லினுக்குணர் வுண்டாகா, வுடலினுள் வாயுப்போறு லுணர்ச்சி யின்றுடலுக்கென்னி, லுடலினுள் வாயுப் போகா துறக்கத்து முணர்வதின்றே- என்றும் சிவப் பிரகாசம் - உடம்புநீயல்லை புறக்கத்தினெல்லா, ம டங்கப் பிணமாகையாலே - திடம்படவும், வேறுதா னுண்டோ விடாதேயருந்துகின்ற, சோறுகாண்கா யச்சுவை. என்றுமற்றும் வருவனவற்றுற் காண்க. (இதன்கருத்து.) சொப்பனதேகம் இத்தேகத்துக்கு அன்னியமென்றும் இத்தேகங்களைக் கன்மவசத்தா ற் பொருந்துவானோர் ஆன்மாவுளனென்றுங் கூறி யது இவ்வளவுஞ் சரீரமே ஆன்மாவென்னும் உலகா யுதனை மறுத்துச் சரீரத்துக்கு அன்னியமாய் ஒரு ஆன்மாஉண்டென்றும் அவன் இம்மைக்கண் செய்த கொலைத் தோடத்தைச் சரீராந்தியத்தில் வேறொரு தேகத்தைப் பொருந்தி நரகத்தில் அனுபவிப்ப துண்டென்றுஞ் சாதித்தது. (ரு)

{ இப்படிகூறிய சைவசித்தாந்தியைநோக்கி மேற்பறங்கி மதவாதி கூறுவான். }

இங்ஙனம் உலகாயுதன் கூறியஉரை பழுது நீர் கூறியவற்றுள்ளுஞ் சிறிதொக்கும் - சிறிதொவ்வா து யாதொக்கும் யாதொவ்வாதெனில்நீர் கொலையா

ற்பாவமுண்டென்பதுலக்கும்எல்லாக்கொலையாலும் பாவமுண்டென்பது கூடாது. அஃதெங்ஙனமெனி ன் - மனிதனை மனிதன் கொன்றால் கொன்றவன் ந ரகத் தழுந்துவான் அஃதுண்மை. மிருகாதிகளைக் கொன்றதனாற் பாவமுண் டென்ப தில்லை அதேனெ னின் மிருகாதிகளை மனிதருக்கு உபகார மாகக் கர் த்தர் படைத்துக் கொடுத்தாரொன்று சத்திய வேதத் திருக்கின்ற தென்றுகூறிய அவனுடைய வுரையைம றுத்துமேலுத்தரங் கூறுகின்றார்.

தேசிறைமானிடர்க்கெவையுமருளினுண்டெக்
　　கீடமையென் செய்வாய் மாந்தர்க்
காசருள்வதெனை வேங்கையாதி யச்சாதி
　　களவர்சொற்கடங் குமாறென்
காசடைந்தமுறையு மோரோர்காற்றிரிவ
　　தெனைமுனஞ் செய்கருமந் தன்னாற்
பேசுமசராதியுருவுயிர்களுறலுண்மையுன்
　　சொற்பிழையா மன்றே.

தேசிறை மானிடர்க் கெவைய மருளினுண்டெ க்கீடமை யென்செய்வாய் - எ-து - ஞானரூபமாகிய ஈச்சுரன் மனிதருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தானாகில் மலத்தின்கண் ஈயால் உண்டாகிய புண்ணிய புழுவும் மற்றும் பரமாணுவினு நுண்ணிய

செந்துக்களும் உனக்கென்ன பிரயோசனத் துக்கு வரும் அவைகள் அப்பிரயோசன மென்னிற் கருத்தா ஞானமயனென்பது கூடாது. இதற்குப் பிரமாணம் - ஏசுமத நிராகரணம்• அறிகிலை நரர்க்காய்வேண்டி யளித்தனன் மிருகமாதி, யிறையவ னென்றுயோரீ யீன்றிட மலைமீதூருஞ், சிறுபுழுவிளையுறுதென்செய்குவை யதனைநோக்கத், தறிவரு நுணியதேகிய னந்தநீ யவையென் செய்வாய். என்பனவற்றுற் காண்க• — வாதியுத்தரம். யாதொரு சீவன்களுஞ் சிறிய வைக ளெல்லாம் பெரியவைக்கிளை யாயொன்றுக் கொன்று வேண்டியிருத்தலின் எவையும் பாரம் பரியத்தில் மனிதருக்கு உபகார மாகப் படைத்ததே - மேல்விடை - மாந்தர்க் காசருள்வதெனை வேங்கையாதி - எது - மனிதருக்கு உபகாரமாகப் படைத்த மிருகவர்க்கத்துள் - சிங்கம் - புலி- யானை - கரடி - பாம்பு - தேள் - முதலி யவை கள் மனிதருக்கு இதரபிரையோசனத் துக்கு வாராமல் வருத்துதலுங் கொல்லுதலுஞ் செய்தலால் உபகாரமாகப் படைத்த தென்பது கூடாது. மேல்வாதியுத்தரம் - கருத்தாவாதி யிலே யொரு மனிதனைப்படைத்து மிருகாதிகளும் அவனுக் கடங்குவ தாகப் பண்ணி யின்னபடி நடவென்றொரு புத்தியுங் கூறுகையால் அவன் அந்தபுத்தியின் வழிநடவாமல் தவ

றுசெய்தலால் மிருகாதிகளுனக்கு அடங்காமற்போ கவென்று சபித்தலின் அவனுக்கும் அவனதுசந்ததி யாகிய மனிதருக்கு மிருகாதிகள் அடங்காமற்போ ச்சுது மேல்விடை - அச்சாதிகள அவர்சொற்கடங் குமாறென் - எது - அங்ஙனம் சாபத்தால் மிருகாதி கள் அடங்காவிடின் ஆடு மாடு எருமை பன்றி நாய் கோழி முதலிய சிறிது சீவன்கள் மனிதருக் கடங் குதலால் சபித்தது பொய்யாஞ் சாபங் தவறித்தெ ன்னிற் கருத்தா வசத்தனும் ஆதலிற் சபித்ததேயில் லை - இதற்குப் பிரமாணம் - ஏசுமத நிரா கர ணம்- வாய்திறந் தலறும் வேங்கை வல்விடமுமிழ்பாம்பா தி, நேயமற் றெவர்கூற்ருய நிகழ்வதெனுலகத் தன் ருட், யேவனுதிக் கோதுஞ் சொன்னெறி யடங்கா தென்னி, ஞயகோவாதிமாந்தர்க் கடங்கிய விதமெ ன்கொல்லோ - என்பனவற்ருற் காண்க-மேல்வாதி யுத்தரம - அங்ஙனஞ் சாபங் தவறிற் றென்பதில்லை- மனிதருக்குப் புலியாதிகள் அடங்காமலும் மாடுமு தலிய வடங்கவுங்கருத்தாவினது சாபமே - மேல்வி டை - காசடைந்த முறையுமோரோர் காற்றிரிவதெ னே - எ-து - நீயிங்ஙனங்கூறியமுறைமையும் பழுது டைத்தா யொருகாலத்திற் பாம்புமுதலிய வொரு வனுக்கு அடங்குதலினுலும் பசுமுதலியவொருவனே க்கொல்லுதலினுலும் அதுவுங் கூடாது ஆதலின்

மனிதருக்கு உபகராமாக மிருகாதி களைப் படைத்த தேயில்லை. இதற்குப் பிரமாணம் ஏசுமதநிராகரண ம் - சொல்லினரற் கசாதியடங்கவுந் துயரஞ்செய் தே, கொல்லமற்றை யவுமேச னென்றிடிற் கொடு நாகாதி, நல்லவாவோரோர்காலத் தடங்கலா நவி லச்சாதி, யல்லல் செய்திட லாற்றீயோ யறைந்த சொற்பழுதேயாகும் - என்பனவற்றாற்காண்க - மே ல்வாதியுத்தரம். அங்ஙனமாயிற்கருத்தாபட்சவாதி யாம் சர்வசீவன் களையும் ஒருபடித் தின்றி யூர்த்த யோனியாகவுந் திரியக்கு யோனியாகவும் படைத் தமையால் - மேல்விடை- முன்செய்கருமந்தன்னாற் பேசு மசராதி யுருவுயிர்க ளூறலுண்மையுன் சொற் பிழையாமன்றே -எது- ஆன்மாக்களெல்லாமொருவ ர்க் கொருவர் அனுதி சென்மாந்திரியங்களிற் செய் த இதாகிதங்களி னுண்டாகிய புண்ணியபாவத்தினு லே இங்ஙனஞ் சொல்லப்பட்டுள்ள சராசர வடிவ ங்களைப் பொருந்துதல் சத்தியம் ஆதலின் உன்னு டைய சத்தியவேதம் அசத்திய வேதமாயிற் றென் றவாறு இதற்குப் பிரமாணம் திருவாசகம் - புல்லா கிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருக மாகி ப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க்கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லா அநின்ற வித்தாபர சங்கமத்

து - ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான். என்று மற்றும் வருவன வற்ருற்காண்க இதன்கருத்து - ஈசுவரன் மனிதருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தானென்பது அசத்தியமென்றும் ஆன்மாக்கள் கன்மத்தால் நாளுருபம்பெற்றது சத்தியமென்றுங் கூறியது. (௬)

{ இப்படி கூறிய சைவசித்தாந்தியை நோக்கி வாமிகூறுவான். }

இங்ஙனம் ஆன்மாக்க ளெல்லாம் கன்மவசத்தாற் சராசரவடிவம் அடைந்தார்களென்றுங் கொலையினுற் பாவமுண்டென்றுங் கூறியதொக்கும், பரங்கிமதவாதி கூறியவுரைபழுதுகொலையினுற் பாவமுண்டாயினுஞ் சிறிதிடத் துண்டு சிறிதிடத் தில்லை அதுவும் மேலேயும்முடைய வசத்தினுலே தானே அறிவிக்கின்றேன் நீர் இப்பொழுதிந்த ஒருவினுவிற்கு உத்தரங் கூறல்வேண்டும். அஃதியாதெனிற் சராசரங்களெல்லாஞ் சீவனென்றீர் அவற்றுள் அசரமாகிய மரமுதலிய சீவன்களை நீர் கொன்றருந்துகின்றீர் அவற்றினுலுமக்குத் தோடமில்லாத தென்னை கூறுமென்னமேலுத்தரங் கூறுகின்ருர்.

பிழையுறுதல் சிறிதசரக் கொலையதனுற் சரக்
கொலையிற்பெருகாதிங்ங

ணிழிவுதரும்பருவமடைதலினாற்கிராதியை
ந்துமீயுந்தூய
வழகியவானானயின்றேன் கிழெனமேலாவர்
குறைந்தடைபாவத்தான்
முழுமலப்பன் றியையருந்தும் புலையர்பன்
றிக்குறும்பருவமுறையினாமால்.

பிழையுறுதல் சிறிதசரக் கொலையதனாற் சரக்கொலையிற் பெருகாது - எ-து - சராசரமெல்லாஞ் சீவனுதலில்அசரக்கொலையினானும் பாவமுண்டென்பது நிச்சயம் பாவமுண்டா யினுஞ் சரக்கொலையிற் பாவம்போலு மிகுதியில்லை கிஞ்சித்பாவம் - மேல்வினா - சீவன்களெல்லாஞ் சமமாயிருக்க அசர சீவகொலையிற் பாவங் குறைந் திருப்பானேன் - மேல்விடை - இங்ஙு ணிழிவுதரும் பருவமடைதலினால் - எது - அந்த அசரசீவிகள் இங்ஙனங் கூறப்பட்டஎழுவகைத் தோற்றத்துட்டாழ்ந்த பருவத்தினை யுடையதாதலினாற் பாவங்கொஞ்சமே - மேல்வினா - அப்படி பருவத்தினது உயர்ச்சிதாழ்ச்சியாற் பாவமேறிக்குறைந் திருப்பதற்குத் திட்டாந்தமியாது - மேல்விடை - கிராதியைந்துமீயுந் தூயவழகிய வானானயின்றேன் கிழெனமேலாவர்குறைந்தடை பாவத்தான் முழுமலப்பன்றியை யருந்தும் புலையர் - எ - து -

பால் - தயிர் - நெய் - கோசல - கோமய மென்னும் பஞ்சகவ்வியங்களையும் - உலகின்கண்வழங் காநிற்கு நின்மலதேகியென்னுஞ் சிறப்பினையுடைய பசுவினது மாங்கிஷத்தைப் புசித்தோன் தாழ்ந்தகுலமாக அவனினு முயர்ந்த குலமென்று சொல்லப்படாநிற்பர்கள் முழுமல தேகியாகிய பன்றி மாங்கிஷத்தைப் புசியாநிற்குஞ்சண்டாளர் பன்றிக்கொலையாற் பாவங்குறைதலின் - மேல்வினு - பன்றியிற் பாவங் குறையவேண்டியதென் - மேல்விடை - பன்றிக்குறும்பருவ முறையினுமால் - எ - து - பன்றிமிருகவர்க்கத்துட் டாழ்ந்த பருவத்தினை யுடையதாகையாலெனக்கொள்க. பசுபஞ்சகவ்வியங்களையும் வழங்கு நின்மலதேகி யென்பதற்குப் பிரமாணம்- தேவாரம் - ஆவினிலைந்துமமர்ந்தாய்நீயே - யளவில் பெருமையுடையாய் நீயே - பூவினி நாற்றமாய் நின்றாய்நீயே - போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே - நாவினடுவுளையாய்நின்றாய்நீயே - நண்ணியடியேன் மேல்வைத்தாய் நீயே - தேவரறியாத்தேவனீயே - திருவையாறகலாதசெம்பொற்சோதியென்றுந்திருப்பாட்டு- மாலையுரித்தன கொண்டங்க மணிந்தவனை வஞ்சர்மனக்கி[illegible]றையு நெஞ்சணுகாதவனை - மூவருருத்தனதா மூ[illegible]முதற்க[illegible]வ முடிகிடு மால் விடையின்பாகனை [illegible]ாச முறப் - பாவகமின்றி மெய்

யே பற்றுமவர்க்க முதைப்பானறுநெய் தயிரைந்தா டுபரம் பரனைக், காவ லெனக் கிறையென் றெய்து வதென்றுகொலோ கார்வயல்சூழ் கானப்பேருறை காளையையே என்றும் சிவதருமோத்திரம் - இங்கு மின்சுவை யீயுமிறைஞ்சுவார்க் - கங்குமின்பமடை கைக்குங்காரணம் - பொங்குதண்புனலுண்டு புற்றி ன்றுநன் - மங்கலந்தருங் கோவெனும் வான்பொரு ள் என்றுஞ் சிவஞானதீபம் - பொற்பமரும் பாற்க டலி னுற்பவமாஞ் சுரபி புகலிலதன் கோமயத்திற் கூவிளந்தானுளவா. மற்புதமாந்திருமகளவ்வில்வம திற்பொருந்து மகிலராம் பளிதமதனைய தனிலுள வாங், கற்பமருஞ் சுரற்கமுதநவநீதத்து திக்குங் க திருடனேசெந்நெலதன் பாலதனிற்றோன்றுஞ், சொ ற்பயில் குங்கிலியமரா யுற்பலநீரதனிற் றோன்றியீ டுமரோசனையு மதனுதரத்துதிக்கும் என்றுங் காசி காண்டம் - ஆன்குளப் படியிற் றோன்று மருந் துக டோயப்பெற்ற, வூன்பயிலியாக்கைகங்கை தோய்ந் ததாமருப்பினுச்சி, வான்புனற் கடவுட்பேரியாறிரு க்கும் வானிலவுகாலுங், கூன்பிறைமுடித்த செல்வி கொம்பிடை வதியுமாதோ. — என்றும் பெரியபுரா ணம் - சீலமுடைய கோக்குலங்கள்சிறக்குந்தகமை த் தேவருடன் - காலமுழுது முலகனைத்துங் காக் குமுதற்காரண மாகு - நீல கண்டர் செய்ய

சடை நிருத்தர் சாத்து நீறுதரு - மூல மவதாரஞ்
செய்ய மூர்த்தமென்றுன் முடிவென்றே — என்று
மற்றும் வருவன வற்றுற்காண்க பன்றி முழுமல
தேகி யென்பதற்குப் பிரமாணம் - ஏறுதமேட்டுக்கி
ரண்டுதுலை யிட்டாப்போற், பேறுயேனங் கோழிப்
பேரிட்டு - மாறுத, புன்மக்கள்வாயிற் புலையாமலமி
றைக்க. நன்மக்கள் கண்டுநகும். என்றும், பன்
றிதுன் மல முண்டாலேன் பரந் துறுதுடலைமெங்கு,
மென் றிருந் தனையோ பேதாயிளைத்தது பருக்குமா
றே, னன்றியுநோயருணல பத்தியமடையக்கண்டு,
முன்றனுளுணராய் நாளுமுண்டனை மலமீதுண்மை
என்றும் அசுத்த மாமலத் தையே தின்றவத்தி
னுலுட் லந்தாங்கு, மசுத்தமாம் பன்றி யாதியரு
ந்தி மாநரகத் தாழு மசுத்தருஞ் சுத்தர் போலுமரு
வருப்புடையராகி, யசுத்தமாநிலத்திற் கீனையாதிதீ
தென்பதென்னே - என்றும்-கூறுநாய்கழுதைபன்றி
கோழியு மலத்தைத் தின்னும், வீறுடன் கழுதைநா
யை விரும்பியே தின்னுதென்கொல், தேறியேதெ
ளிந்து பார்க்கிற்றீ தானமலமா மெல்லாம், வேறு
மோர் நரகத்தெல்லை விதிக்கவு மிவர்க்கு வேண்டா
ம் என்றும் தம்மினு முயர்ந்தோர் கீழோர் தமதிலத்
தறலுண்டாரோலம்மவங் கவருங்கீழென் றவர்மனை
ப் புன லுமுண் ணு, விம்மனிதர்கடாஞ்சிச்சி யீனர்தம்

மலத்தையுண்டு, விம்முடற் பன்றியாதி விரும்பியுண் டுவப்பதென்னே. என்றுமற்றும் வருவனவற்றுற்காண்க. பன்றியாதிகளை யுண்டோரும் புலையரென்பதற்குப் பிரமாணம் - திருவள்ளுவர் - கொலைவினையராகிய மாக்கள் புலைவினையர் - புன்மை தெரிவாரகத்து - என்றும் சிவவாக்கியர் - புலையனைப் புலையனென்னும் புத்தியற்றமாந்தரோ - புலையனார் மலம்புசிக்க நாடுமீது புத்தியோ - புலையருக்குளொக்குமும் மையென்றுரைத்த புல்லரும் - புலையராகி நரகினுட் புகுவரை யராணையே என்றும் - ஈவானே தெய்வமிரப்பே யிழிதாவொன், றுய்வானே நூலின்பயனறிவான் - பேய்வாழுங், காடேகரப்பவர்தம்மில்லங் கடும்புலையன். வீடேவிடக்குண்பான்வீடு என்றும் பறையனைப் பறையனென்று பறைந்திடு மனிதர்கேளீர்-பறையர்தம்மலத்தைத்தின்றபன்றியைப்புசிப்பதென்னே, கறையதேயாகுமந்தக்கறிதனைக் கலத்தினிட்டு, மறையவேவைத்துத்தின்னு மனிதரோ பறையர்கண்டீர் என்றும் புலையென்னும் புலைதீரப்புனலென்னும் புனன்மூழ்கி யலைகின்ற முழுமூடரறிவென்னவறிவென்ன, புலையன்றன் மலமுண்ணுமெமையுண்ணும் புலையர்க்குக் - குலமென்ன நலமென்ன கூகூ வென்றனகோழி - என்றுமற்றும் வருவனவற்றுற்காண்க, பன்றி மிருக வர்க்கத்துட் டாழ்ந்த

பருவத்தினையுடைய தென்பதற்குப் பிரமாணம் திருவிளையாடல் - அன்றியும் பெருமை மிக்க வலகில் யோனிகளிற்றூயா-தென்றுமேலாக வோங்குந்தலை வநீ யிழிந்த பொல்லாப் - பன்றியுநாற்காலுள்ள பல்பெருஞ் சாதிக்கெல்லா - மொன்றிய கடையதன்றூ வுளத்திடை யோருங்காலே என்றுமற்றும் வருவன வற்றுற்காண்க - இதன்கருத்து - சராசரபேதமுணர்த்து வான்பருவத்தாற் பசுவுயர்ந்த தென்றும் பன்றிதாழ்ந்ததென்றுங் கூறியது - இப்படி கூறிய சைவ சித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமிகூறுவான் - பசுவும் பன்றியு மிருகசாதிய பேதமாயிருக்கப் பருவபேதம் வருவானேனென்ற வளவில் அவனைநோக்கி மேலுத்தரங் கூறுகின்றூர் - முறைமை தெரியந்தணரும்புலையருமானிடரொனலின் மொழிந்தவானுஞ் செறிமலப் பன்றியுமிருகமெனப் படுமோங்கவர் கொலையிற்றி கழாநிற்கு நிறைவிஞெடு குறைவடைந்தான் பன்றி யிவற்றருங் கொலைக்கணிகழும் பாவ மறிஞரிவையெனக் கொலைமையசரமதிற் குறைதரு மென்றறைவரன்றே—எ - து - அங்ஙனம் பசுவும் பன்றியு மிருகவபேதமுடையதாய் மிருகசாதி யொன்றென்னப்படுதல் பிராமணரும் - புலையரு மனிதர் சாதியொன் றென்பதற் கொக்கும் - இங்ஙனம் பிர்மகொலையினும் நீச்சக் கொலையினும் பாவ

மேறிக் குறைந்திருத்தல்போலும் பசுக்கொலையினும் பன்றிக் கொலையினும் பாவமேறிக் குறைந்திருக்கு மெனக்கொள்க - இத்தன்மைபோலுஞ் சராசரத்திற் பாவமேறிக் குறைந்திருக்கு மென்ப ரறிவுடையோ ரென்றவாறு — பிராமணரும் பசுவுமுயர்ந்த பருவத்தினையுடைய வென்பதற்குப் பிரமாணம்— சிவ தருமோத்திரம் அரனுதியோருமு வரமரோசர் மருமானு மொருவாமலுறைவார்க ளுமையாதிமடவாரு - மரிதாயமறையோர்க ளுடலாவி னுடலார் வமொருவாது வழிபாடு புரிவார்க ளுய்ர்வாரோ - என்றுங் காசிகாண்டம் - உறுபுலனடக்கி வேதநெறிவழி யொழுகிநின்ற-வறுதொழி லோருமானுங்குலமொன்று மவருளாய்ந்து மறுவறு மறையோர் தம்பான் மந்திரமனைத்தும் வைத்தேன் ஞுறுவிடையவிகளியாவுந் தோமறத் தொகுத்துவைத்தேன் — என்றும் வருவன வற்றுற்காண்க. — ( இதன்கருத்து ) பிரமகத்தி கோவகத்தியிற் பாவமேறியு நீச்சக்கொலையிற் பன்றிக்கொலையிற்பாவங்குறைந்துமிருத்தல் போலப் பருவபேதத்தாற் சரக்கொலையிற் பாவமேறியும் அசரக்கொலையிற் பாவங் குறைந்தும் - இருக்குமென்றுசாதித்தது. (௭)

{ பின்னும் வாமியை நோக்கி அசரக்கொலையிற் பாவங் குறையு மென்பதற்கு மேலு மோருத்தரம் வலியுறுத்திக் கூறுகின்றார் }

அன்றியுந்தாபரவுருவஞ் சரமதுபோற்குறை
ப்பினுயிரகலாப்பாவங்
குன்றியுறலுண்மையவைகுருவாதிக்களித்து
ணவக்கொலைமைதன்னே
டொன்றியுழவாதியிற்சார்பாவமுந்தேய்ந்த
ழியுமன்னோர்க்கூட்டொணுது
னன்றறிகண்ணப்பரினம்பனைச்செருப்பா
லுதைப்பதெவனலமில்லோயே.

அன்றியுந் தாபரவுருவஞ் சரமதுபோற்குறைப் பினுயிரகலாப் பாவங்குன்றி யுறலுண்மை - எ - து- தாழ்ந்தபருவத் தசரக்கொலையிற் பாவங் குறைந்திருக்கு மென்பதன்றியும் பின்னுமொரு விதத்தானும் அவற்றினது கொலையிற் பாவங் குறையு மென்று கூறப்படும். அஃதெற்றாலென்னில் அசரவடிவங்களானது சரவடிவங்களைப்போலக் குறைக்கருவி கொண்டு குறைக்குமிடத்து நாசத்தை யடையாது பின்னுங் கிளைத் தெழுத லானுந் தறித்த கோட்டினைமற்றோரிடத்தில் வைக்க அதுவுந்தரிக்குதலானும் அவற்றினது கொலையாற் பாவஞ் சரக்கொலையை நிகரன்றிக் குறையுமென்பதே சத்தியம். இதற்குப்பிரமாணம் புலான்மறுத்தல் - மரக்கோட்டைக்காதிவந்து வைத்தான் மரமுமரக்கோடுந்தா னிரண்டாய்வாழுஞ் - சரிக்கின்ற வோருயிரின் கால்வாங்கி யோரிட

த்தே வைத்தான் மற் றீருயிர் தானு மோ விய ம்பு - என்றும் வருவன வற்றுற்காண்க - மேல்வினு அப்படி அசரக்கொலை யாற் பாவமற்பமாய் வரினு நாடோறும் வந்து கூடுதலாற் சரீராந்தியத்தில் அநேகமாகச் சுமக்கும் அஃதன்றியும் அசர முயற்சி யானுண்டாகுஞ் சரக்கொலை களுமனந்த மாதலின் அவற்றினது பலத்தினை நீரனுபவியாது நீங்குமாறெங்ஙனம் - மேல்விடை - அவைகுருவாதிக்களித்துண வக் கொலைமை தன்னோடொன்றி யுழவாதியிற் சார் பாவமுந் தேய்ந்தழியும், எ - து - யாதொரு விவேகியானவன் அசர பதார்த்தங்களை வேதாகமங்களில் இல்லறத்திற் கோதிய தருமம் வழுவாமற் றேவரதிதியனல் தேசிகரென்னு நால்வகை யோர்க்கு முன்னூட்டிப் பின்னுண் பானுகில் அன்னங்காய் தழைமுதலிய் அசரக்கொலையான் வருந்தோடமுமற்றுஉழுதல் கூலிவேலை செய்குதல் வாணிபஞ்செய்குதல் சினமிகுத்தல் அசத்தியங் கூறல் வீடுதூர்க்குதல் மெழுகுதல் நெருப்பு மூட்டிடுதல் தண்ணீர்க் கவர்தல் நெற்குத்துதல் என்பன கூடப்பத்து விதத்தான்வரும் பாவமும் உடனுக்குடனே நட்டமாதலின் அவனுக்குச்சரீராந்தியத்திற் சுமக்கும் பாவமே யில்லை- இதற்குப் பிரமாணம் - சைவசமயநெறி விளக்கம் - தேவரதிதி யனல் தேசிகர்க்கென் றட்டவன் னங்

தேவருலகத் தமுதமென் - என்றும்சிவதருமோத்தி
ரம் - தலத்துழல் கூலிவேலை சந்தையிற் கொண்டுவி
ற்கை - கொலைத்தசொற் கூட்டுங் கோப மசத்தியங்
கூறலுள்ளு - மலக்கிடன் மெழுகலங்கி யாக்கனிர
ரிசியென்றே - யிலக்கணத்தியம் `பும்பத்துங் தமக்
கெனிற் பாவமீட்டும் அன்றியும் - தேசுறு சிவாதிபூ
சைக் கெனவிவைதன்னைச்செய்யி - ஞசமாம் பாவ
பேதந் தம்மையேநாடிச் செய்யிற் பாசமாநரக பே
தப்படுகுழி படுத்தியென்று மூசல் போலுழல் வித்
தாக்குந் துயரினுக்களவு முண்டோ - அன்றியும் அ
ட்டவைதன்றூற் சொன்னநால் வருமருந் தவன்பா
லிட்டுமிக்கதனையுண் கையமுதமீயாதேயுண் கைகட்
டமுங்கடுவு மாவிகழிந்த வூன்காயந்தானு மொட்டி
யே யுடலிற்றேூன்றும் புழுவுமென் ஞெழிகவோர்
ந்தே - அன்றியும் - இறவாதிருக்கச் செய்யு மருந்தி
யாதே யெனினுமில்லகத்துத் துறவாதிருந்தார் - மூ
வரோடுந் துய்த்தல்கடனே துயக்குற்றுப் பிறர்சொ
ல்பழியும் பேணுதேபெரியோர் தமக்குநாணுதே சி
றிது மிரக்கஞ் செய்யாதே தானே யருந்துஞ்சி தட
னுமே. — என்றும் - காசிகாண்டம் - தேவர் தென்
புலத்தோர் துறந்தவர்க் களித்த சேடநல்ல மிர்தி
னுமினிதாமியாவரோ யெனினுமதிதியரிறந்தோரிமை
யவரிங்கிவர்க்கின்றிக் - கூவல் போலாழ்ந்த யாழ்வ

யறதனிற் கொட்டுதற் கமைத்த வெண்சோறு நாவு றை புழுவாமென மறையனைத்து நவின்றிடு மென் பர்நன்குணர்ந்தோர் - அன்றியும் - உம்பர் வேதியர் விருந்தினரையூட்டிநுகரா - தம்பசிக் கனறணிப்பந ணிதுய்த்தவிவரை - வெம்புகண்ட கருளத்தின் மிக வெம்மை புரியுங் - கும்பிபாகநரகத்திடை குளிப்ப வெறிவாய் - என்றுமற்றும் வருவன வற்ருற் கா ண்க - மேல்வினு - இம்முறைமை மாங்கி ஷத்தை நிவேதித்தாற் குருவாதிக் கற்புதமாகாதோ - மேல் விடை அன்னோர்க் கூட்டொணுதுன் - எ - து - கு ருவாதி நால்வர்க்கு மாங்கிஷத்தை நிவேதிக்கவொ ண்ணுமையின் அது செய்தலிற் சரக்கொலைமை நீங் குதல் கூடாது - அதென் போல வெனில் ஒருவன்ஒ ருகுற்றஞ்செய்து அக்குற்றத்தை நீக்குவான் பொ ருட்டு இராசாவைமன்ருடச் செல்லுமளவில் அந்த அரசன் பிறிதியில்லாத காரியத்தைச் செய்துக்கொ ண்டு போனுனேயாகில் முன்பு அவன் செய்தகுற்ற முந் தீராது பின்புந் தெண்டிக்கப் படுவான் அது போலும் பிறிதியில்லாத மாங்கிஷத்தை ஈச்சுராதி தேவதைகளுக்கு நிவேதித்தால் சரக்கொலைமையுந் தீராமல் அனுற்பிதமாதலின் அதிபாதகமும்வரும்- மேல்வினு. — மாங்கிஷம் ஈசுவரப்பிறிதியன் றெ ன்பது கூடாது - முன்பு கண்ணப்பர் நிவேதித் திரு

த்தலின் - மேல்விடை-நன்றறிகண்ணப்பரினம்பனை
ச் செருப்பாலுதைப்ப தெவனலமில்லோயே-எ-து-
கண்ணப்பர் மாங்கிஷமிட்டு முத்திபெற்ற ரென்ப
து சுபாவம் - அதுபோலப் பிறரு மாங்கிஷத்தை
நிவேதித்தல் கூடாது - அதேனென்னில் கண்ணப்
பர்பூர்வ சென்மத்தில் செய்த தபோபலத் தினாலே
ஒருகாலத்திற் காளத்தி யீசுவரரைக் கண்டமாத்தி
ரத்திலே பேயின்கட் பிடியுண்டா னொருவனுக்கு அ
வனது சரித்திரம் பேயின் சரித்திர மாகி நின்றது
போலக்கண்ணப்பருடைய சரித்திர மெல்லாங் கா
ளத்தி யீசுவரருடையசரித்திரமாகநிற்றலால் அவர்
க்கு மோக்ஷங் கைகூடிற்று அவருன்னைப் போலும்
ஒரு ஆசாரியனை யடைந்து இதுபாவமிது புண்ணிய
மிது செய்யலாமிது செய்யலாகாதென் றொருக்கா
லுங் கேட்டறிந்தவரு மல்லர் அவர் முன்பு பழகியி
ருந்த பழக்கத்தைப் பின்னும் பத்தி மிகுதி யினாற்
செய்தனர் அவர்போலும் ஒருவ னீசுவரனுக்கு மா
ங்கிஷ நிவேதிப்பானாகில் வாய் நீரால பிடேகம் ப
ண்ணிச் செருப்புக் காலாலுதைப்பதுஞ் செய்யவே
ண்டும் அப்படியுஞ் செய்யலாமென் றொருவன் நி
னைத்தானாகில் அவன் போய்விழு நரகத்திற் பின்
பொருவர் வீழ்வாருமில்லை யாதலின் கண்ணப்பரு
டைய பத்தியை நீவிதியென்று பிரமா ணித்தல்

கூடாதுமிருதியுநல்லறிவுடையாததீயோனேயென்ற வாறு - இதன்கருத்து எவ்விதத்தானும் அசரக்கொலையிற்பாவங் குறையுமென்றும் அக்கொலைமையுமீசுராதி பூசையாற் கெடுமென்று மாங்கிஷ நிவேதித்தல் அன்னோர்க்காகாதென்றுங் கண்ணப்பர் செயல் பத்தி யென்றுங் கூறியது. (அ)

பின்னும் வாமியை நோக்கிப் பத்திமார்க்கத்தை விதிபோலும் பிரமாணிக் குதல் கூடாதென்று மேலும் வலியுறுத்தி கூறுகின்றார்.

நலந்தருதாதையைவதைத்துமுத்திபெற்றோ
   ருளரொனிலிஞ்ஞாலத்தூடே
கலந்துமுத்தியடையுனர்க்கெல்லாமதுவோ
   கதியுலகங்கடந்தபத்தி
வலந்தனைநீவிதியெனக் கூறுதல்பழுதான்ற
   னையிமையவரைமாதுக்கின்
னிலந்தனிற்பத்திமுதலாஞ்சத்திகட்கும்
   வரைவெனினீநிகழ்த்தறீதே.

நலந்தருதாதையைவதைத்து முத்திபெற்றோரு ளரொனிலிஞ் ஞாலத்தூடே கலந்து முத்தியடையு னர்க் கெல்லா மதுவோகதி யுலகங் கடந்தபத்தி வலந்தனை நீவிதியெனக் கூறுதல் பழுது — எ - து -

உலகத்தின் கண்ணே யொருவர் பத்தி மிகுதியாற் செய்த சரித்திரங்களை நீவிதியென் றொருக்காலும் பிரமாணித்தல் கூடாது. அதேதெனென்னில் தண்டேசுர நாயனார் பிதாவைக் கொன்றுமுத்தி யடைந்தா ரென்றுஞ் சிறுத்தொண்டநாயனார் பிள்ளையை யறுத்திட்டு முத்தி யடைந்தாரென்றும் அதுவேவழியாகப் பிறரும் பிதாவைக்கொன்றும் பிள்ளையைக்கொன்று முத்தியடைவாரில்லை, அப்படி போலும் இப்பொழுது மொருவனுக்கு மிகுந்த பத்திவந்ததாயினும்விசேடித் தொருகருமங்களைச்செய்வதொழிந்துமுன் பொருவன்பத்திமையாற்செய்தபடி தானுஞ் செய்யவேண்டு மென்ப தில்லை பின்னொருவன் முன்னோர்சரித்திரத்தைப் பிரமாணிக்குதல் கூடாது மேலும் விதிமார்க்கத்தையொழிந்து பத்திமார்க்கத்தை ஒருக்காலும் பிரமாணிக்க வொண்ணாது. அதெப்படியென்னில் ஓரேரியின் கண்ணே மிகுத்த வெள்ளமானது ஒருகாலையினடுவே முறித்துக்கொண்டு சென்றதாயின் அதுவேயேரிக்குக் கலிங் கென்று விடுவாரில்லை யேரியின்கடையிற் கலிங்குவிடுவதேயுண்மை யதுபோலுங் கண்ணப்பநாயனார் முதலாயினோர்செய்ததுல்கா தீதமாய் சிவானுக்கிரக வலியினையுடைய மிகுத்தபத்தியை நாளும் விதியென்று கொண்டு ஈசுவரனுக்கு நீமாங்கிஷம்நிவேதிப்பலென்பது

மிகுத்த குற்றமென் றறிவா யாக.— இதற்குப் பிரமாணம் - வெள்ளமிகுத்தேரிநடுவுடைத்தோடின துகலிங்காய்விடுகிலாரப்-பள்ளமடைத்திருபுறத்துங் கடைவிடுவருலகோரப் பரிசுபோலு- முள்ளமிகுத்த திவெழலாற்பத்திமிகுத்தமையா னென்றொருவர்செ ய்யிற்- றெள்ளுணர்வோரதனைவிதியென்று பின்னும் புரிகுவரோ தெளிவிலோயேஎன்று மற்றும்வருவன வற்றுற்காண்க — ஈசுவரனுக்குமாங்கிஷநிவேதித்த ற்குவிதியில்லையென்பதுகூடாது. ஈசுரபின்னமாகிய உமா பரமேஸ்பரிக்குப் பிறிதி யாகையால் மேல்வி டை - ஊன்றனை யிமையவரை மாதுக்கின் னிலந்த ணிற்பத்திரைமுதலாஞ் சத்திகட்கும்வரைவெனினீ கழ்த்தறீதே — எ - து - தம்பன மோகன முச்சாட னம் வசியம் ஆகருணம் வித்துவேஷணம் பெந்த னம் மாரணமென்று சொல்லப்பட்ட அட்ட கன்ம ங்களையுங் குறித்து இன்னிலத்தின்கண் பத்திரையா கிய அனந்த சத்திகளில் ஒவ்வொரு சத்திகளைய ற்சிப்போரும் அச்சத்திகட்கு மாங்கிஷநிவேதித்தல் அயோக்கியமாதலின்அவர்கட்குச்செய்யு முறைமை யேசுத்தோ பசாரஞ்செய்து அச்சத்திகளது பரிசா ரகபேதமாகிய பைசாசங்கட்கு மது மாங்கிஷத்தை நிவேதிப்பார்களாதலின் எல்லாச்சத்திகட்குங் கா ரணமாயுலகத்தின் கண்ணுயிர்களை யெல்லாம் வள

ர்ப்பன முப்பத்திரண்டறங்களையும் வளர்க்கும் பொருளினையுடைய வுமாபரமேஸ்பரிக்கு மாங்கிஷநிவேதிக்கலாமென்று சொன்னவார்த்தையே யதிபாதகம். இதற்குப்பிரமாணம் — மண்டலத்துங் காளிமுதற்சத்திகடேவர்க ளெவர்க்கும் வழங்குரு - ணண்டியிருந்துள பூதபசாசங் கட்களித்திடுவரதனை நீயுங் - கண்டிருந்து முமைக்குரைத்தாய திபாவமெண்கருமங்கருதிஞேருன் - கொண்டவண்சூழ்பூதாதிக்கிடுவரன் றிச்சத்திகள்பாற்குறுகாரன்றே.— என்றுமற்றும் வருவன வற்ருற்காண்க (இதன் கருத்து.) பத்திமார்க்கத்தை விதிமார்க்கம் போலும் நெறியாய்க்கொள்ளொணுதென்றுஞ் சத்திபூசைக்கு மாங்கிஷநிவேதனம்அயோக்கிய மென்றுங் கூறியது. (கூ)

{ இப்படி கூறியசைவ சித்தாந்தியை நோக்கிப்பின்னும் வாமிகூறுவான். }

மாங்கிஷ நிவேதனஞ் சத்திகட்கற் பிதமாகாவிடினும் அச்சத்திகளது பரிசாரக பைசாசங் கட்கிடுதலினுனுஞ் சரக்கொலைமை நீங்கும். எந்தக்குயவன் சுடுகினும் பானைவேகல் பிரமாணம் போலுமென்ருயாகில் அது கூடாதென்று மேலுத்தரங் கூறுகின்ருர்.

தீதிலசத்திகட்சூழ்ந்தோர்க்குணவூணுண்டம
ரான்றிச்செறிபூதாதிக்
காதலின்மற்றவையுணலானகலினுமக்கொ
லைமைமுழுதகன்றிடாவான்
மீதலத்துமசுராிராக்கதருமுண்பருனதனை
விரும்பாரொன்றுஞ்
சோதிமணிமுடியமுதாசனர்சுரத்தன்மையி
னாற்பூசுரரைப்போலும்.

தீதிலசத்திகட் சூழ்ந்தோர்க் குணவூ ணுண்டமரான்றிச் செறிபூதாதிக் - காதலின் மற்றவையுணலானகலினுமக் கொலைமை முழுதகன்றிடா வான்- எ - து - குற்றமற்ற பத்திரை யாதி சத்திகளிடத்து அட்டகன் மங்களைப் பெறுவோர்க ளவரதுசமுகத்துள்ள தேவகணங்களையன்றிப் பூதபைசாசங்கட்கு மாங்கிஷ நிவேதிப்பதுண்டா யிருத்தலினன்றோ நீயவற்றினாற் பாவ நீங்கு மென்பது கூறினை அதுகூடாது. அவ்விடத்துண்டாகிய பூதாதி களுக்கு மாங்கிஷ நிவேதித்தலால் அக்கொலைமை நீங்கினுஞ்சிறிதல்லது முழுதுநீங்காது. அதெப்படி யென்னில், ஒருவன் தான் செய்த குற்றமற்பமாயிருக்க வும் அக்குற்றத்தை யிராசாவைவழிபட்டவனது கருணையாற்றீர்த்துக் கொண்டானாகில் இராசாவுக்கு மிக

வுந் துவேஷம் வருவதாகிய மிகுந்த குற்றத்தைச் செய்தவனிராசாவின் வாசற்காற் போனனுசரனை யாற்றீர்த்துக்கொள்ளுதல்கூடாது, அவர்களாற்றீ ருமிடத்துங் கிஞ்சித்மிதஞ் செய்வதொழிந்து குற்ற முழுதும் பரிகரித்தல் கூடாது. குற்றமுழுதும் பரி கரிக்கநினைக்கு மிடத்து அவர்களுக்குங் கூடவே ஆ க்கினைவரும் அப்படிபோல்நாம் அசரத்தினால்வரும் அற்ப பாவத்தை யீசுவரப் பிறிதி பண்ணித்தீர்த்துக் கொண்டோமாயி னீசுரப்பிறிதியல்லாதசரக்கொலை தோஷத்தைச் சத்திபரிசன பைசாசங்களால்நீக்கிக் கொள்ளு வேனென்பது கூடாதுஅந்தபசாசகணங்க ளும்அந்தப்பசாசகணங்களுக்கதிபதியாகியசத்தியா திதேவதைகளுந் தங்களுக் கீசுரன் அமைத்தமுறமை யொழிந் தேறக்குறைய நடந்தார்களாயின் அவர்க ளுஞ் செனனமரணப்பட்டு வருந்துவாரொன்பது நி ச்சயம். இதற்குப் பிரமாணம் — சிவஞான சித்தி- யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகியங் கே - மாதொருபாகனுரும் வருவர் மைற்றைய தெ ய்வங்கள் - வேதனைப்படுமிறக்கும் பிறக்கும் பின்வி னையுஞ்செய்யு - மாதலா னவைகளில்லா னறிந்தரு ள்செய்வனன்றே என்றும் வருவனவற்றுற் கண்டு கொள்க — மேல்வினு - துற்காதிசத்திகளுக்கு மா ங்கிஷ நிவேதிப்பது யோக்கியமாயினும் வானுலகத்

தின்கணிருந்துளமுப்பத்துமுக்கோடிதேவர்களுக்கு ம் அவற்றினை நிவேதிப்பது அயோக்கியம் மேல்விடை — மீதலத்து மசுரரிராக்கதரு முண்பருனதனை விரும்பாரொன்றுஞ் - சோதிமணிமுடிய முதாசனர்சுரத்தன்மையினாற் பூசுரரைப்போலும் - எ - து - வானுலகத்து மசுரரிராக்கத பூதபசாசாதிகளே மாங்கிஷபக்ஷண யோக்கியர் - பிரகாசம் பொருந்திய மணிமுடிகளைத் தரித்துள தேவர்களாவார் அமுதபக்ஷண யோக்கியர். அத்தேவர்கட்கு மாங்கிஷ நிவேதிக்க வொண்ணா தென்பதற்குப் பிரமாணம் அநுமானம் - அஃதெங்ஙன மெனின், வானுலகத்துத் தேவர்களூன்றின்ப தில்லைத்தேவத்தன்மை யுடையவர்களாதலின் யெங்கே தேவத்தன்மை யுண்டோ யங்கே யூன்றின்பதில்லை, இங்ஙனம் பூசுரர் போலும் ஆதலிற்றேவர்கட்கு மாங்கிஷ நிவேதனம் அனாற்பிதமென்றறிவாயாக. (இதன்கருத்து) சத்திகள் பரிசனபைசாசங்கட்கு மாங்கிஷ நிவேதித்தலாற் சுரக்கொலைமை முழுது நீங்காதென்றும் எவ்விடத்தும் அசுராதிகளுக்கே மாங்கிஷமற்பிதமென்றும் தேவப்பிராமணருக்கு மாங்கிஷம் அனாற்பிதமென்றுங் கூறியது. (கo)

{ இப்படிகூறியசைவசித்தாந்தியை நோக்கிப்பின்னும் வாமிகூறுவான். }

நீரிங்ஙனங்கூறியவனுமானத்திற்ருேஷமுண்டு- வியர்த்தியின்மையி னஃதெங்ஙனமெனின் - சபக்க மாகிய பிராமணரிடத்துத் தேவத்தன்மை யுண்டா யினும்புலாலுண்ணுமைநியமமில்லை - யாகத்தின்கட் புசித்தல்காணப்படுதலின் (மேல்விடை)

பூசுரருக்கிழுவிலையாகத்துயிர்கொன் றருந்த
லின்விண்புகுதாநிற்பர்
கோசமெடுத்துரைநவிற்ருசிரியர்சிருர்க்கித
மதுபின்கொடுப்பான்முன்னர்
ஆசுமிகுதுயர்விளைத்துமிதமதுவாய்ப்பொருள்
பெறலினரியவேத
வோசைமிகுமமருலகையவர்வதைத்தசீவ
னும்பெற்றுய்தலாலே.

பூசுரருக் கிழிவிலையாகத்துயர் கொன்றருந்தலி ன்விண் புகுதாநிற்பர் - எ - து - பூசுரர் யாகத்தின் கண் சீவகொலை பண்ணிப் புலாலுண்டார்க ளாயினு ம் புலாலுண் டோர்களடையும் பாவத்தினை யடை யாமல் அவற்றினுல் மிகுந்த புண்ணியராகித்துறக்க லோகமடையாநிற்பர்கள் - ஆதலின் அன்னேரொரு க்காலும் புலாலுண்டதேயில்லை (மேல்வினு) பூசுரர் யாகத்தின்கட் சீவகொலை செய்தும் புலாலுண்டுந் தாழ்வடையாது சொற்க மடையவேண்டியதென்.

(மேல்விடை) கோசமெடுத்துரைநவிற்ரு சிரியர்சிரு ர்ச்கிதமதுபின் கொடுப்பான் முன்ன - ராசு மிகுது யர்விளைத்து மிதமது வாய்ப் பொருள் பெறலினரி யவேத - வோசைமிகுமமருலகை யவர்வதைத்த சீ வனும்பெற்றுய்தலாலே (எ - து) பொத்தகத்தின் க ணுண்டாகிய சத்தங்களைப் பள்ளியின்கட் சிறுவர்க ட்கோ திவிக்கு முபாத்தியாரானவர் அன்னோர்க்கு ப் பின்புசுகத்தை விளைப்பான் பொருட்டு முன்னர னேகங்குற்றமாகத் தோன்றுவதுக் கங்களை விளைவி த்தும் அவரது மாதா பிதாக்கள் அவற்றினை மிகவு மிதமாகக் கொள்ளுதலின் உபாத்தியாயரும் பொரு ள்பெற்றுச் சுகமடைதல் போலும் பூசுரர் யாகத்தி ன் கட்கொன்ற சீவன் அப்பொழுது துக்கத்தை ய டைந்ததாயினும் பின்பு மிகவும் வேதவோசை முழ ங்குதலை யுடைய தெய்வலோகத்தை யெய்திச் சுக மடைதலால் யாகம் புரிந்த பூசுரரும் பரமேஸ்வர னதருளினலே வானுலகம் புகுந்துய்யாநிற்பர்களெ ன்றவாறு:

(இதன்கருத்து) யாகத்தின்கட் பூசுரர் விதிபுரி தலாற் பாவமில்லையென்று கூறியது (கக)

{ இப்படி சொன்ன சைவ சித்தாந்தி
யைப் பின்னும் வாமி நோக்கி யாக }

{ நிமித்த மிறந் துளசிவன் சொற்க
மடைவ தெவ்விதத்தா னென்று வி
னுவ மேலுத்தரங் கூறுகின்றார். }

உய்ந்திடுமெம் மகத்தவிமுன் பான்கொளலா
னவ்வூன் றூய்துறலாற்சுத்தி
தந்தமறைமந்திரராற்றழல்விடங்கெட்டிரு
விருக்குந்தன்மைத்தவ்வூ
னிந்தடைவுபுரிகவுனக்கிருமறைகூறுதியற்
றற்கியம்பாநிற்கு
மந்தவுரையிறைமொழியன்றாரணத்துக்கது
விருத்தமாகையாலே.

உய்ந்திடுமெம் மகத்தவி முன்பான் கொளலான் (எ-து) யாகத்தின் கணிறந்துள சிவன் சொற்கமடையும் அவ்விடத்து ருத்திராவிற் பாகமுதற்கொடுத்து மற்றுள்ள தேவர்கட்கு முறைதவிராது பின் பவிற்பாகங் கொடுத்தலின் உருத்திராவிற்பாக முதலென்பதற்குப் பிரமாணம். திருப்பாட்டு- கட்டகாட்டினட மாடுவரி யாவர்க்குங் காட்சியுண்ணார், சுட்டவெண்ணீ றணிந்தாடுவர் பாடுவர் தூயநெய்யால், வட்டகுண்டத்தி லெரிவளர்த்தோம் பி மறைபயில்வா, ரட்டக்கொண் டுண்பதறிந்தோமேல் நாமிவற் காட்பட்டோமே,— .என்றும்-பெ

ரியபுராணம் - வெய்யகனற்பதங்கொள்ள வேவுறு மோ வேணுமன்பா, ஐய்யுமனத்தினிமையினி னை யமிக மென்றிட லாற், செய்யு மறைவேழ்வி யோர் முன்பு தருந்திருந் தவியி, னெய்யும்வரி சிலையவ ன்று னிட்டவூ னெனக்கினிய.— என்றும் வருவ னவற்றுற் காண்க. (மேல்வினு) நன்றுச்சுது மு ன்னந் தேவாற்பிதமல்லப் புலாலுணவென்று சா தித்தல் வேண்டிப் பிராமணரைத் திட்டாந் தங் கூறினீர் அவர்கள் யாகத்தின் கட்புசிக்கின்றுரெ ன்பது கொண்டிங்ஙனந் தேவர்களுக்குந் தேவா திபராகிய உருத்தி ரற்கு மாகுமென்றீர் முதலா காதென்றதே திவ்விடத்தாகு மென்ற விசேடமி யாது. (மேல்விடை) ஊன்றாய் துறலால் (எ-து) யாகத்தின் கணிருந்த மாங்கிஷ மியாக மல்லாத விடத்திருந்த மாங்கிஷ்ம்போல வசுத்த மாகாமற் சுத்தியடைதலால் (மேல்வினு) யாகத்தின் கணி ருந்த மாங்கிஷமி யாதொன்றினுற் சுத்தியடைந் தது (மேல்விடை) சுத்திதந்தமறை (எ-து) அது வேத மந்திரத்தாற் சுத்தியடையும் (மேல்வினு) அப்படி மந்திரத்தாற் சுத்தியடைமிற் புலா லுரு மாறி மரக்கறிரூப மடையவேணும். அஃதின்மை யாற்சுத்தி யடைந்ததற் கடையாளமியாது (மே ல்விடை) மந்திரராற் றழல்விடங் கேட் டுருவிரு

க்குந் தன்மைத்தவ்வூன் (எ-து) மந்திரவாதிக ளினாலே அக்கினியுருவ மிருக்கத் தக்கதாக ச்ச த்தி தம்பனை யடைந்ததுபோலும் மந்திரத்தாற்றடை பட்ட எட்டி அலரி முதலிய விடங்களெல்லாமொ ருவரை மிகக்கொல்லுந் தன்மை கெட்டது போ லும் வேழ்விக்கணிருந்தபுலாலு மாங்கிஷத்தன்மை கெட்டு நிருமலத்தன்மை யடையும் அப்படியாத லினது வுருத்திராதி தேவாற்பிதமாம் அதனாலே யந்தவுடலத்தின் கணிருந்த சீவனுந் திவ்வியபோ கத்தை யடையும் அப்படிபரசிவ மிதஞ்சாதி த்த லின் வேழ்விமுடித்த பூசுரருந் திவ்வியபதவிக்க னுகூலமாகிய சிறப்பினை யடையாநிற்பர்கள் யா கமவிதி யென்பதற்குப் பிராமணம்.— திருக்கடை க்காப்பு- பறப்பை ப்படுத்தெங்கும் பசுவேட்டெ ரியோம்புஞ்- சிறப்பர்வாழ் தில்லைச்சிற்றம்பலமே ய -பிறப்பில் பெருமானை ப்பின்றாழ் சடையானை மறப்பிலார் கண்டீர் மையறீர்வாரே.— என்றுந் தேவாரம்- சிந்தையை த்திகைப்பியாதே செறிவு டை யடிமைசெய்ய -வெந்தைநீ யருளிச்செய்யா யாதுநான் செய்வ தென்னே- செந்தியால் வேழ் வியோவாத் தில்லைச் சிற்றம்பலத்தே- அந்தியும் ப கலுமாட வடியிணையலசுங் கொல்லோ.— என்று ந் திருப்பாட்டு- ஒருமேகமுகிலாகி யொத்துலகுவு

தாயையாவன வுநிற்பனவு மூழிகளுந் தாயுய்ப் பொருமேவு கடலாகிப் பூதங்களைந்தாயப் புனை த்தவனைப் புண்ணியனைப் புரிசடையினானைத் - தி ருமேவு செல்வத்தாற் றீமூன்றும்வளர்த்த திருத்த க்க வந்தணர்களோது நகரொங்குங்- கருமேதிசெ ந்தாமரைமேவு கழினிக்காரூட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே.— என்றுமற்றும் வருவன வற்றுற் காண்க (மேல்வாதியுத்தரம்) இப்படி நீர்சொன் னது சத்தியம்- யாதொருவனாகினுஞ் சரக்கொலை பண்ணும்பொழுது அவற்றினை மந்திரோப தேச த்தினாலே சுத்திபண்ணி யவற்றினானைத்தே வாற் பிதம் பண்ணுமற் றன்னைக் குறித்துக்கொன்று தி ன்றானயினவ னரகத் தழுந்துவ னென்பது உபய மதசித்தமே யாதலானும் மந்திரோப தேசத்தி னாற் பசுவைச் சுத்தி பண்ணி யவற்றினான் புனி தமாதலின் மாதாவுக்கு மவளதுசமுகத்துள்ள வீ சுராதி தேவதைகளுக்கு நிவேதனம் பண்ணி யவ் விடத்திறந்த பசுவை முத்தியடைவித்துத் தாமுந் தேவியுடைய பிரசாதங் கொள்ளுதலா லவளுடை ய பாதத்தையடைத லுண்மையாதலி னும்முடை ய வேழ்விபோலு நம்முடைய வாமபூசாசரித்திர மென்றாயாகில் (மேல்விடை) இந்தடைவு புரிக வுனக்கிருமறைகூறுது (எ - து) நம்முடைய வே

ழ்விபோலும் பசுப்படுத்து வாமபூசை பண்ணலா மென்று வுனக்கு வேதவிதியின்மை யினப்படிசெ ய்தல்கூடாது. (மேல்வாதியுத்தரம்) வேதவிதி யி ல்லாதுகொண்டு நமக்கொரு குறையில்லை பசுப்ப டுத்து மாதாவுக் கற்பிதம் பண்ணலாமென்று வா மதந்திரவிதிதமுண்டு, (மேல்விடை) இயற்றற்கி யம்பா நிற்குமந்த வுரையிறை மொழியன்று,[எ-து] அப்படியுனக்குச் சத்திபூசை பண்ணலா மென்று கூறியவாம தந்திர மீசுரவாக்கியமல்ல (மேல்வி னா) வாமதந்திர மனீசுவரவாக்கிய மென்பதெற் றால், (மேல்விடை) ஆரணத்துக்கது விருத்தமா கையாலே (எ-து) நம்மாலங் கீகரிக்கப்பட்ட வேதங்களுக் குன்னுடைய வாமதந்திரம் விரோ தமா யிருத்தலினெனக் கொள்க (இதன்கருத்து) வேழ்விக்கணிறந்த சீவன் சொற்கமடையுமென்று மங்ஙனம் வாமதந்திரம் வேதவிதியல்ல வென்று மாதலின் அன்னூலீசுவர வாக்கிய மன்றென்றுங் கூறியது. (கஉ)

{இப்படி சொன்ன சைவ சித்தாந்தியை நோக்கிமேல்வாமி கூறுவான் உம்முடை யவேதத்துக்கு நம்முடையவாமதந்திரம் விரோத மாதலின் வாமதந்திரம னீசுவர}

{வாக்கிய மாவதில்லை - வாம தந்திரத்து
க்கு வேதம் விரோத மாதலின் வேதம
னீசுவரவாக்கிமென்றுகூறுதலும் அவனை
நோக்கி யுத்தரங் கூறுகின்றார்.}

ஆகிய வெக்கலைத் துணிவுமவற்றுளவற்றுளதெ
வற்றுமடங்காதாத
லேகனுமைமறையாதியியம்புமவற்றுளதிழுக்
கென்றெவர்க்குஞ்சித்தி
வாகுறவுண்டதைமதியேலருளாகமவேதவ
ழிவந்தோர்க்குண்
டோகைதரும்பிரமசித்தியொழிந்தவையுமவர்க்
கெளிதென்றுளத்துட்டே.

(எ - து) ஆகிய வெக்கலைத்துணிவு மவற்றுள வற்றுள தெவற்று மடங்காதாத - லேகனுமைமறையாதி (எ - து) உலகின்கணுள்ள பலசமயநூல்களுமிருதி புராணக்கலை ஞானாதிகளும் வேதாகமத்தினில் வழிநூல் சார்புநூல்க ளாதலானு மவைகளில்முடிந்த பொருள்களை வேதாகமங்களொ ரோவிடத்தெடுத்துக் காட்டுதலானும் வேதாகமத்துட்டுணிபொருள்களை யவைகளி னளப்பரிதா யவத்தமாகையினானும் வேதாகமங்களிரண்டுமே யீசுவரவாக்கியமதெப்படி யென்னி லிராசாவின்வாசற்கணக்கிற் கிராமவழிக் கணக்குக ளளவிடப் பட்டு அக்

கிராமவழிக்கணக்குகளா னிராசாவின் வாசற்கண க்குகளளவிடப்படாமைபோலு மெனக்கொள்க. (இதற்குப்பிரமாணம்) சிவஞான சித்தி - அருமறை யாக மமுதுநூலனைத்து முணர்க்கை யிறைவளப்பரி தாமரும் பொருளை யரனருளாலனுக்க - டருவர்க ள்பின்றனித் தனியேதா மறிந்த வளவிற் றக்கமோ டுத்தரங்களினூற் சமயஞ் சாதித்து - மிருதிபுராண ங்கலைகள் மற்றுமெல்லா மெய்நூலின் வழியேயு டையாக மங்கமேவேதாகஞ் - சுருதியிவரகமொழி யச்சொல்லுவ தொன்றில்லைச் சொல்லுவார் தமக் கறையோ சொல்லொணாதே — என்றுமற்றும்வரு வன வற்றுற்காண்க. (மேல்வினா) எல்லாச் சமை யங்களின்முடிபொருளும் வேதாகமத்தடங்குமாயி னெம் முடைய வாமதந்திரத்தை வேதாகமங்கள் சொல்லாதென்ற தெப்படி, (மேல்விடை) இயம்பு மவற்றுளதிழுக்கென்று (எ - து) உன்னுடையவாம தந்திரத்தை வேதாகமங்கள் சொல்லுஞ் சொல்லு மிடத்துச் செந்நெறியென்று துதியாது கொடுநெறி யென்று நிந்திக்கு மஃதேனெனிற் கொலைமைசூழ் தலினதற்குப் பிரமாணம், (திருவள்ளுவர்) நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங் - கொ ல்லாமைசூழுநெறி, என்றுமற்றும் வருவனவற்றுற் காண்க, (மேல்வாதியுத்தரம்)அப்படி வாமதந்திரங்

கொடு நெறியாகி லந்நெறி நின்றோர்க்குத் தெய்வீ கசித்திகளுண்டாகாமற் போகவேணும். நாதாந்தி களாயினோர் சத்தியை யர்ச்சித்து அவளது கருணை யானந்த சித்திகளை யடைந் துலகின் கண்ணேவந் துவிளையாடு தலின் வாமதந்திரம் செந்நெறியேயெ ன்றாயாகில், (மேல்விடை) எவர்க்குஞ் சித்திவாகு றவுண்டதை மதியேல், (எ - து) உன்னிலுமுயர்ந் தோராகில் வேதஞ்சொன்ன தருமத்திலே நடக்கு முட்சமைமயிகளுக்கு முன்னொடு சமானபாஷண்ட ராகிய வேதத்துக்கன்னியராகிய புறச்மைமயிகளுக் குமுன்னிலுந் தாழ்ந்தோரா யுலகத் தின் கண்ணே துர்த் தேவதை பூத பைசாசா திகளை யனுசரிப் போர்க்குமவரவர் முற்செய்த கன்மபலத்தினாலே யத்தேவதையை யுண் டென்று கருதி வயிராக்கி யங்களைச் செய்தலினா னந்தத் தேவதைகள் தங் கள் தங்களுக்குண்டான சத்திக்கிசைய ஒருசித்தி களைக் கொடுக்கு மாதலினுன் சமையத்துக்கு மா த்திர முண்டாய் மற்றோர் விடத்து மில்லாவிடினு ன்றோ சித்தி பிரதானமாய் நாட்டவேணுஞ் சர் வரிடத்திலு முண்டாயிருத்தலி னவற்றினைக் கார ணமாய் மதித்து வாதித்தலைவிடுவிடு—(மேல்வினா) சர்வரிடத்திலுஞ் சித்திகளுண்டாகில் எல்லாச் ச மயங்களுக்குஞ் சமமேயெனு தம்முடைய வேதாக

மஞ் சொன்ன தருமத்திலே நடப்பததிகமென்று சொல்லுவானேன், (மேல்விடை) அருளானுசம வேத வழ வந்தோர்க் குண்டோ கைதரும் பிரம சித்தி, (எ - து) திருவரு டுணையாக வேதா கம வழியை யுள்ள படி யறிந் தடைந்தோர்க் கு யாவரானுங் கிட்டுதற் கரிதாய் நித்தி யானந்தத்தைக் கொடுப்பதாகிய பரம சிவசித்தி கிடைக்கும். — (இதற்குப் பிரமாணம்) சிவஞான சித்தி.—அருளினுலாக மத்தை யறியலா மளவினு லுந், தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற்சி ந்தையுள்ளே, மருளெலா நீங்கக் கண்டு வாழலா ம் பிறவிமாயா, விருளெலா மிரிக்கலாகு மடியரோ டிருக்கலாமே. — என்றுமற்றும் வருவனவற்றுற்கா ண்க — சுத்தமுத்தி யடைந்தாலொழிந்தி யாதொ ருவ னடையும் பதமுத்திகளுந் துன்பமேயல்லா தின்பமில்லை என்பனகுறித்து - ஓகைதரும் பிரமசி த்தி யென்று கூறிஞ ரெனக் கொள்க. இதற்குப் பிரமாணம் திருவள்ளுவர். — தனக்குவமையில்லா தான் ருள் சேர்ந்தாற் கல்லான் - மனக்கவலைமாற் றலரிது. என்றுந் திருக்கடைக் காப்பு. — செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்செல்வமதி தோ யச் - செல்வமுயர்கின்ற செல்வர் வாழ்தில்லைச்சி ற்றம்பலமேய, செல்வன் கழலேத்துஞ் செல்வஞ்

செல்வமே என்றுந்திருமந்திரம் — ஒழிந்தேன் பிற
வியுறவென்னும் பாசங் - கழிந்தேன் கடவுளுநானு
மொன்ருனே - னழிந்தாங்கினி வருமாக்கமும்வே
ண்டேன்-செழுஞ்சால்புடையசிவனைக்கண்டேனே,
என்றுந் திருப்பாட்டு. — விடையின்மேல் வருவா
னைவேதத்தின் பொருளானை - யடையிலன் புடை
யானையாவர்க்கு மறியவொண்ணு - மடையில் வா
ளைகள்பாயும்வன் பாத்தான் பனங்காட்டூர் - சடை
யிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே,
என்றுந் திருவாசகம் — நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினைவேனைச் - சிறுநெறிகள் சேராமேதி
ருவருள் சேரும்வண்ணங்-குறியொன்றுமில்லாதகூ
த்தன் றன் கூத்தையெனக் - கறியும்வண்ண மருளி
யவாரூர் பெறுவாரச்சோவே. என்றுஞ் சிவதரு
மோத்திரம். — இம்முறைய மரருமிடுக்க ணெய்து
வர் – தம்மினுமுயர்ந்தவர் பதத்தைத் தாமுன்னி -
யெம்முறையானு மெய்யிடுக்கணேதுவே செம்மை
யசெல்வமே சிவானுபூதியே,என்றுந் தத்துவாமிர்த
ம்-மூவரோ முதல் மொழிந்திடு மிமையவர்பதமுஞ் -
சாவதோடுறு சனனமென் சாகரத்தமுந்தி - மேவு
பாதியிற் பட்டுநான் மிருதியுற்றழியுந் - தேவர்தன்
பதந் தீதென மிகவெறுத்தனனல் என்றும் சொரு
பானந்தசித்தி. — ஆதலானறியு மறிவெலாங் கைவி

ட்டறிவினுக்கறிவதாய்நின்ற - பேதமில்பிரமமொன்றுமேகாண்பான் பேறும் பேரின்பமாய்ப் பிறத்தல்-சாதலற்றிருக்கு மதனையோர் வருத்தமின்றியேசாரலாயிருக்க- யாதரித்தறியாரற்பமேவிரும்பியனந்த துக்கத்திலே யமைவார். என்றுமற்றும் வருவனவற்றுற்காண்க —இத்தன்மை யுடையது வேதாகம நெறிக ளாதலி னவைக ளேயதிக மென்ற தெனக் கொள்க, (மேல்வினா) ஆறு லுமக்குப்பிரமஞ் சித்திக்குமாயி னச்சித்தியப்பிரத்தியட்சமே எமக்குண்டாகிய பிரத்தியட்ச சித்திக ளுமக்குண்டாகாது (மேல்விடை) ஒழிந்தவையு மவர்க்கெளிதென்றுளத்துட்டேோ (எ - து) வேதஞ்சொன்ன தருமத்திலேநடந்து பூரணவத்து சித்தி யடைந்தோர்க்குக் கைவசமாகாத சித்திகளுலகத்தின் கண்ணே யில்லை அஃதெங்ஙன மெனின் பூச்சக்கிர வர்த்தி யாகிய வொருவனுக்கோர் கிராமமணிய விசாரணை யின்மை யானந்தக் கிரமாதிகார மவனுக்குண் டென்று மில்லை யென்றுஞ் சொல்ல வேண்டுவ திவ்லை போலு மெனக் கொள்க. (இதற்குப் பிரமாணம்) திருவாசகம் - மண்ணின் மாயைமதித்துவகுத்த மயக்கறுமாகாதே - வானவரும் மறியாமலர்ப் பாதம் வணங்குதுமாகாதே — கண்ணிலிகாலமனைத்திலும்வந்த கலக்ககறுமாகாதே - காதல்செயுமடி

யார்மனமின்று களித்திடுமாகாதே — பெண்ணலி யாணெனநாமெனவந்த பிணக்கறுமாகாதே - பேர றியாதவனேக பவங்கள் பிழைத்தன வாகாதேஎண் ணிலியாகிய சித்திகள்வந்தெனையெய்துவதாகாதே- யென்னையுடைப் பெருமா னருளீச னெழுந் தருளப் பெறிலே. — என்றும் பட்டினத்துப் பிள்ளைபாடல். பொருளுங் குலனும் புகழுந் திறனு, மருளுமறிவும மைந்து - மொருவர்க், கருதா வென்பார்க்குங் க றை மிடற்றாய் தொல்லை, மருதா வென் பார்க்குவரு ம். என்றும்அனுபவசாரம். அறமுநல்கிடும்பொருளு டனின்பமு மருந்தவங்களு நல்குந் - துறவுங் கல்வி யுந் துணிவொடு நிலைமையுந் தூய்மையு மிகநல்கு, நிறமுநீர்மையு நினைந்தவை முழுவது நிகரில் வீட துநல்கு - மறிவனன் கழலொழிய வங்கவை நினைந் தழிப்பவரறிவென்னே என்றுமற்றும் வருவனவற் றுற்காண்க. (இதன்கருத்து) வேதாகம மீசுரவாக் கியமென்று மவற்றின்வழிநடப்பதே செந்நெறியெ ன்றும் பூரணவத்து சித்தியே சித்தி யென்றுங் கூறியது. (௧௯)

{ இப்படி சொன்ன சித்தாந்தியை நோக்கி மேலும் வாமிகூறுவான். }

உம்முடைய வேதாகமவழிப்படி நடந்துளோர்

ர்க்குப் பூரணவத்து சித்திக்கு மென்று நீர்சொல்லு வதே யொழிந்து நம்முடைய வாமதந்திரானு சார ணைபோலுமக் கந்த வஸ்துவுடனே பிரசன்னமாவ தில்லை - ஒருவன் கூழேனும் காடி யேனும் பசிக்கு தவினதே தேவாமுதமென்பது போலும் முடைய வேதாகம வழிநின்று வஸ்து சித்திக்குமோ சித்தி யாதோ வென்று பிறயாசைப் படுகிறதிலும் வாம தந்திரத்திற் சொன்னபடிநின்று சத்தியையாராதி த்து யெளிதிற் சித்தி யடைவதே விவேக மென்று கூறுதலுமவனுக்குத் தரங் கூறுகின்றார்.

தேர்ந்திலைகொல் கீழ்நெறி சேர்வதெளிதுயர்
மனையுஞ்சேரக்கிட்டாச்
சார்ந்திடின்வேண்டியதருமாதனைத்தருமெம்
மிறையுமிவண்டனிற்சார்வாய்ப்பிற்
போந்திடுமெண்கருமிகள்சார்வுன்னதுலோ
கிதன்மகிழும்பெரியோய்ஞானங்
கூர்ந்தவர்வான்சிறப்பெனினுங்கொலையின்
வருமெனிற்கடையாய்க்கொள்வரன்றே.

(எ - து) தேர்ந் திலை கொல் கீழ்நெறி சே ர்வதெளி துயர் மனையுஞ் சேரக்கிட்டாச் - சார்ந்தி டின் வேண்டியதருமா தனைத்தருமெம் மிறையு மி வண்டனிற் சார்வாய்ப்பிற் - போந்திடு மெண்கரு

மிகள் சார்வுன்னது. ( எ - து ) இங்ஙனம் கூறியவ
ற்றுள்ளு மிதனைநீமிகவும்விசாரியாது கூறினை யஃ
தெங்ஙன மெனின் இப்பூமி யின்கண் ணொரு பு
லையனைக்காண்டலு மவனது நட்புக் கொள்ளுதலு
மரிதல்ல வெளி தினுகு மவனாற் பெறும் பயனு
ம் புலவிற்கு முதலிய கருமமாங்தேசாதி பதியை
ச் சினேகித்த லொருவற்கு மெளிதிற் கூடாது
அவனதுவாசல்மந்திரியா தியோர்களையொருவனனு
சரித்துச் செய்கிற வுபசாரத் தளவி லெக்காலத்
தாயினு மனேக காலத்தாயினு மிராச சமுகங்கி
ட்டுதல் செய்வர் அப்படி யந்த ராசாவை அடை
ந்தவனது சித்தம் வரநடந்தா னுகி லவனைத் தன்
போலுங்தேசாதி பதியாக்குவன் அப்படி யெம்மு
டைய கர்த்தாவை யாதொருவன் கருதிசுருதி கு
ரு சுவானுபவ சித்தமாக வடைந்தானுகி லவனை
த்தன்மயமாக் குவனது வன்றியி வ்வுலகின் கண்
ணொரு மகத்துவம் போலக் காட்டிய வற்றினுற்
றற் சரீரத்துக் கருந்தல் பொருந் தலையும் கீர்த்தி
யையும்பிறராலடைந்துமச்ச ரீராந்தியத்தழிவதாகி
யதம்பனுதியட்டகன்மங் களையொரு பொருளாகக்
குறித்த புல்லறிவாளரனுசரிக்கு நெறி காணுன்னு
டையவா மதந்திராதி கொடுநெறிகள். இதற்குப்
பிரமாணம். —வலிதொரு புலையன்றன் மனைக்கு

யர்ந்தோர்வரி னெதிர்தொழுதுபுன்கருமஞ் - சொ லு முனமுடிப்பன மைச்சராதி களாற்றுனாதனைப் பல்பகல டைந்தோர்க் - கலகில் வாழ்வருள்வனெ னத்தலைமநினைந்தோர்க்கருள்வர்புன் றேவரொண்கரு மங் - குலவுமீசனுந் தன்னடி யராற்றனை யேகுறுகி னர்க் கருளுவன்றனையே, என்று மற்றும் வருவன வற்றுற்காண்க. (மேல்வினு) ஆனால் வாமதந் திர த்தை யட்டகன்மங்களையிச்சித் தோரன்றிமோட்ச த்தை வேண்டிய ஞானிகளநுசரியார்களோ (மேல் விடை) உலோகிதன்மகிழும் பெரியோய் ஞானங் கூர்ந்தவர்வான்சிற ப்பெனினுங் கொலையின் வரு மெனிற் கடையாய்க் கொள்வரன்றே, (எ - து) கொலையாதி கட்கஞ்சாமை செய்தலினாலுஞ் சத் திபூசையின் கணளேகஸ்திரீ கணங்கள்சூழ நடுநா யகமாகத் தோன்றிக்களித்து விளையாடுதலி னானுமு னக்கொருவர் நிகரில்லையென்று நீயேயென்னுடை ய பிராணசிநேகனென்று மிதற்குச்சந்தேகமில்லை வலக்கைதாவென்று முலகின் கண்மூடருளெல்லா முழுமூடனாகிய வுலோகாயுதனாலே மகிழப்பட்டுள் ள பெரியோனே கூறுதுங் கேட்பாயாக, ஆருட ஞானத்தையுடைய நாதாக்கள் மோட்ச மெனினிற் கிடைப்பதாயினு மொருகொலை முன்னிலையாய்க் கிடைக்கு மாயினவற்றை க்கடையானமோட்சமா

ப் கைவிடுவராதலின் இங்஡னம் கொலைமுன்னிலை யாய் மறுமைக் கண் ணரகத்தை விளைக்கு மட்ட கன்மங்களைத் தருவ தாகிய வுன்னுடைய கொடு நெறியை யொருக்காலும் விரும்பார்க ளென்றவா று. உலோகாயுதன் மகிழும் பெரியோ யென்ப தற்குப் பிரமாணம் - சிவஞான சித்தி, வாழவேவ ல்லை வாமி வலக்கை தா வென்னுயிர்க்குத் தோ ழனியுன்னை யொப்பார் சொல்லிடி னில்லைக் கண் டாய் - கோழை மானிடர் தீ தென்னுங் கொலைகளா வாதி கொண்டே - சூழும்வார் குழலார் மெய்ப்பச் சுடனைத் தோன்றி னையே. — என்றும ற்றும் வருவன வற்றுற்காண்க. கொலையான் வ ருவன பேற்றைக் கடையாகக் கொள்வ னென்ப தற் குப் பிரமாணம் - திருவள்ளுவர், நன்றாகு மாக்க ம்பெரி தெனினுஞ் சான்றோர்க்குக் - கொன்றாகுமா க்கங்கடை. அன்றியும், அவி சொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற - னுயிர் செகுத் துண்ணாமைந ன்று. —என்று மற்றும் வருவன வற்றுற் காண் க. ஞானிகள் அட்டகன்ம நெறியை வேண்டார்க ளென்ப தற்குப் பிரமாணம் - திருமந் திரம். வே ண்டார்கள் கன்மம் விமலனுக் காட் பட்டோர் - வேண்டுவார்கன்ம நல்லிசையார்ச் சிப்போர் - வே ண்டார்கள் கன்ம மிகுசிவயோகிகள் - வேண்டா

ர்கள்கன்மம் விழுமியோர்ந் தன்பே.— என்றும் பு லான்மறுத்தல். இம்மைபயனு மிருநாலு கன்மங் க - டம்முட் குறித்தான் கொடுபூசித் - தம்மார்க்க ஞ் - செய்வதலது சிவஞான வாரிதிசேர்ந் - துய்யு மவர்க் காகாவுணர்— என்றும் மற்றும்வரு வன வற்றுற்காண்க (இதன்கருத்து) துற்தேவதா பி ரசன்ன மெளிதென்று மவற்றினுன் வரும்பயன் மிகவுஞ் சிறுமையினையுடைய அட்டகன்மங்களென் றும் அவற்றினை யனுசரிப்போர் மிகவும் புல்லறி வுடை யோரொன்றுஞ் சிவப்பிரசன்ன மிகவும் அ ருமையுடையதென்றும் அவற்றினுன் வரும்பயன் மோட்சமென்றும் அவற்றினை யனுசரிப் போர் மிக வுமுயர்ந்த தத்துவஞானிகளென்றுங்கூறியது. (கச)

{ இப்படிகூறிய சைவசித்தாந்தியை நோ க்கி மேலும்வாமி கூறுகின்றான். }

நீரிங்ஙனம் தத்துவஞானிகள் கொலை செய்குத லும் புலாலுண்டலுஞ் செய்யாரென்பது கூடாது அதேனெனி லுலகத்தின் கணுண்டாகிய ஞானநூல் களெல்லாம் ஞானசரித்திரம்அக்கினிக் கொப்பென் று கூறுதலான் அக்கினியின்கண்யாதொருமலாதிக ள் சார்ந்த தாயினுஞ் சுட்டுநீருக்கு தல்போலும் ஞானியானவனு மியாதொரு புசிப்பு வந்தடைந்

து காலையினு நன்றுதீதென்று பாராமற் கொண்டு ஞானுக்கினியாற் றசனம் பணணிப்போடு வனுத லின் ஞானமில்லாதவரோ புலாலுணவு விடவேணு ம் - ஞானிக் கஃதில்லை யென்றுயாகி லவ்வுரைப ழுதென்று மேலுத்தரங் கூறுகின்றார்.

அன்றழற்கொப் பறிஞரெதி ரருவினையைச்
சுடுதலினாலன்றியாதுந்
தின்றன்மரு ளருளினர்வீட்ட முதளநீராடி
யுண்போர்திகழ்தீத்தாருய்
கன்றியெரிக்கு தல்விலக்கலிலவூனிற்சிலவிலக்
கிக்கசிந்துநீயோ
ரொன்றருந்த லெனையொருவன் றரவுணினா
ன்கொலை தடுத்தாண்டுரை த்திடாயால்,

(எ - து.) அன்றழற் கொப்பறிஞ ரெதிரருவி னையைச் சுடுதலினாலன்றி (எ - து) அக்கினிக்குச்ச மானம் ஞானியென்ப தொக்கும் அதுகொண்டுநீ கூறிய கருத்து மல்ல - மற்றெங்ஙன மெனின் ஞா னியானவன் சஞ்சித கர்மத்தைக் குருகடாஷத்தா ற் போக்கிப் பிரார்த்த கன்மத்தை யெடுத்த வுட லின்கண்ணே யனுபவித்துத் தொலைத்து மேலு மொரு செனனத்துக்கு ஏதுவாகவரு மாகாமியக ர்மத்தைத்தற் போதமிறந்திடத் துண்டாகிய ஞா

ஞக்கினியாற் சுடுதலின் அக்கினிக் கொப்பென்பர், இதற்குப் பிரமாணம் - சிவப் பிரகாசம். எல்லை யிற்பிறவி நல்கு மிருவினை யெரிசேர்வித்தி - ஞெல் லையினகலு மென்ற வுடற்பழவினைகளுண்டுந் - தொ ல்லையில் வருதல்போலத் தோன்றிரு வினைகளுண் டே - லெல்லொளிபுரையுஞான த்தழலுற வழிந்து போமே. என்றுமற்றும் வருவன வற்றுற்காண்க. யாதுந்தின்றன்மருள் (எ - து) அல்லதியாதொரு பதார்த்த முந்தள்ளாது புசிப்பான் ஞானியென்னு மிடத்து மொருவர் மலாதிகளையிடினுந் தள்ளாது புசித்தல்வேண்டும் அப்படி புசித்ததனாற் குற்றமியா தெனின் அங்ஙனஞ் செய்குதல் மிருதியு மறியா மையினைத்தருவதாகிய பயித்தியாதிக்க மென்னப் படுமாதலின் அறிவுடை யோர்க்கறியாமை கூறுத ன்மிகவும்பழுது ஞானியானவன் யாரெனின் - அரு ளினர்வீட்ட முதுள நீராடியுண் போர், (எ - து) ஞானிக ளெனப்படுவோர், அந்தக்கரணம் புறக்கர ணமடக்குத லொருவழிப்படுதல். பொறைநிடம் ஞான மடைகுதல் சத்தியங் கூறுதல் இன்சொற் கூறுதல் தானஞ் செய்குதலுயிர்கட்கிதஞ் செய்கு தலாதியான மானத தீர்த்தமாடி முத்தியாகிய வ முதினை யுண்டிருப்போ ரெனக்கொள்க — இதற்கு ப்பிரமாணம் (காசிகாண்டம்) சத்தியந் தானஞ்

சமதெமமிஞ் சொற் சாற்றுத லொருவழிப் படு
தல் - புத்தியே முதலகரண மோர் நான்குமட
க்குதல் புலன்கள் போம்வழி யினுய்த்திடாதமை
த்தல் பொறைதிடம் ஞானமுயிர்க் கெலாந்தண்
ணளிபுரித - லித்திற மனைத்து மானத தீர்த்தனெ
னவெடுத் தியம்பினர் மேலோர் — அன்றியும், உ
ரைப்பருமானத தீர்த்த மோதிடிற் - சுருக்கமில்ஞா
னநீர் தோய்தன்மற்றது - விருப் பொடு வெறுப்பெ
னவிளம்பப் பட்டதோர்-கருப்புகுத் திடுமலங்கழு
வுமென்பவே,—என்றும் மெய்மொழிச் சரிதை. ச
த்திய முரைக்கநாளுஞ் சகலபல்லுயிர் கட்கெல்லா
ம் - நித்தலுமிதமே செய்ய நினைப்பது சிவத்தை
யென்று - மத்தன்வேதா கமத்தினருளிய பொருளி
ம்மூன்று - மெத்திறச்சமையத் தோர்க்கு மெம்மத
ங்களுக்கு மிட்டம் என்றும்-உடுப்பது சீலமுணவு
வீட்டமுதமுவப் பதுஞானமாமடந்தைக், கொடுப்
பதுமருளைக்கொள்வது மறத்தை யிருப்பது மருந்
தவக்குகையாம் - விடுப்பதுகுற்றந் தொடுப்பதுசா
ந்தம்வெல்வதுந் தம்மை மெய்க்குரவ - னடித்தல
மலரோ முடிப்பது பிறப்பை யறுப்பவர்க்கருந்தொ
ழிலிவையே —என்றும் மற்றும் வருவன வற்றுற்
காண்க — இத்தன்மையுடையோர் ஞானியென்
றமையா னிதற்கு விரோத மாகிய கொலை புலா

லுணவு முத லாகிய துற்கருமங்களை யாசை மிகு தியாற் கொண்டன் னெறியே செந் நெறி யென் று நாட்டுவோ ரஞ் ஞானிக ளென்பது மாயிற்று. இதற்குப் பிரமாணம் சிவதரு மோத்திரம். ப ண்ணுன் பரம சிவஞானி பாவ விதமும் பயிற்றி டினு - முண் ணுன் போக மெனப் பனுவ லுரைக் கு மதனு லொரு தலையே - நண் ணேந் துயரமெ னப் பெரியோர் நவையுமி யற்றி நசை யாலே- மண்ணோர வலமா சுரையை மாற்றி யிடவே வ ல் லாரார் —என்றுஞ் சிவஞான தீபம் - நிலையுறு தி யா சார மொழுக்கஞ் சீல நிறை யறிவு கரு ணைதவ நெறி நிலாமற் - கொலை களவு கட் காம முதலா யுள்ள கொடும் பாவமே தவமாய்க் கொ ள்ளுந் தீயோ - ருல கிலருஞ் சிவனரு ணுலோத லாகா தோதினு மங்கவ னுரை கொள்ளொ ணுது நீலம் புலையர் மருவிடுந் தெருவிற் பொல்லாக்கும் பி பொருந்தி யிடுங் குழி யதனுட் பூத்த தாமே என்றும், ஞான வாரமுதைச் சுவையினைச் செவி யா னலம் பெறக் கேட்ட வப்பொழுதே - யான காரியமு மாகு காரியமு மாயலாக் கடவ காரிய முங் - கானனீராயே கழிதரு மென்ருற் களிதரவ முத மேயுண்ட - ஞானிதா னழியும் விடையமேவி டுமோ நண்ணிடின் ஞானியன் றவனே—என்றும்

அருட்பிர காசம். வேதத்திலா கமத்திற் புகறாய விதிதவறார் - கோதுத் திடினுந் தமதற் றிருப்பர் கள் கொள்கை யன்றித் - தீதைத்தின முனைப் போலும் புரிந்தது செந்நெறியாய் - வாதிப்பரோ கெடுவாய் சிவஞா னங்கை வந்தவரோ,—என்றும் நிலையாம் புலமைவள்ளுவர் மூலர் நிகழ்த்துசைவ த்—தலையாய்மூவர் திருவா தவூரர்தருதமிழு-டிலை யாகமாதியுங் கூறுதுனக்கிவ் விருநில மேற்-கொ லையாதி ஞானி பணலா மென்று ரொவர்கூறுகவே.— என்று-மற்றும் வருவன வற்றுற் காண்க இதுவ ன்றி, நீயக்கினிக் கொப்பென்ற சொற்கின்னமொ ருதோட முண்டு கூறுதும். (மேல்விடை) திகழ் தீத்தானுய்க் கன்றி யெரிக்குதல் விலக்கலிலனுனி ற்சில விலக்கிக்க சிந்து நீயோ-ரொன் றருந்தலெ னை (எ-து) பிரகாச மயமாகிய வக்கினி யானது ஒரொரு முன்னி லையா யொன்றினைச் சுடுவதன் றிதனதுசுதந் தரத்தாற் பற்றி யொன்றினை யுஞ்சு டாதுப ரேச்சையாற் சுடும்பொழுது மோரொரு பதார்த் தங்களை யிச்சித்துச் சுட்டும் வெறுத்துத் தள்ளியும் விடாது அந்நெருப்பினை நீபுலா லுண டலினு லுனக் கொப்புக் கூறினை யாயிற் பன்றி மாங்கிஷம் போல நாய் கழுதை முதலிய வற்றி ன்மாங்கிஷத்தையும், உடும்புமாங் கிஷம்போலவை

ஞன் மாங்கிஷத்தையுஞ் சமமாகக் கண்டு புசித் தல்வேண்டும் அதுவன்றி யன்ன பானுதி களிலீ யெறும் புபாச்சை கரப்பான் முதலிய வற்றினொ ன்றுவீழ்ந் திருப் பக்காணினுமிகவும் அரோசகமு டையனு யுண்ட சோற்றையுங் கான்றிடக் கண் டேம தனுனுமோ ரொரு மாங்கிஷத்தை யிச்சித் துப்புசித்தலி னுனு மக்கினிக் கொப்பென்றல் கூ டாது. சிறிதுப்பதார்த்தத்தி லரோசகமடைவ னெ ன்பதற்குப் பிரமாணம், உண்டிடுஞ் சோற்றினூ டேயோர் மயிரொறும்பியாது - கண்டு முன்பருந்தி லாய்முன் பயின்றதுங் கான்றிட்டா யான்-மண்ட ணிற் பன்றியாதி மலத்தைமுன் பழக் கத்தாலுட்- கொண்டிட விரும்பு மாறென் கூறுதி யறிவிலா தோய்.—அன்றியும், உளறுகாயாதி தன்னி னுதித் ததோர் புழுக் கண்டாயேல் - வேறவே வீசிச்சிந் தைமெய்முகக் குலைந்துற்றுயா, ஞறுமுன் புழுத் ததேனு நனிமிகவிரும்பியுள்ளந் - தெறிநீயுண்டவா றென் செப்புதி தெளிவிலாதோய். — அன்றியும், தகருனதெதிரோ சிந்தத்தாண் டெரித் திட்டகோ ழைப்-புகலு முன்மீதிற்றுக் கப்பொழுதுளங் கொ லைந்துற்றுயாற் - பகர் தருமவற்றி னூனைப் பற்றி யமூளை யோடு - மகமகிழ்ந் தயின்றவாறே னறை குதியறி விலாதோய்.—என்று-மற்றும் வருவனவ

ற்றுற் காண்க.—பிழையுறுதல் சிறிதென் பனதொ ட்டுநீயோரொன் றருந்த லென்னை யென்பன கா றுஞ்சத்தி பூசைக்குமாங்கிஷநி வேதிக்கலாமென் றவாமியை மறுத்துச் சத்தியாதி தேவதை களுக் குமாங்கிஷநி வேதனம் யோக்கிய மென்றென்று ம்வேழ்வி செய்குதல் வேதவிதி யென்றும் வேதா கமமீசுரவாக்கிய மென்றும் பரமமுத்தி யாலின்ப முண்டென்று மட்டகன் மத்தாற்றுன்ப முண்டெ ன்றுந் தன்னுயிர் போலமன்னு யிர்க்கிரங்குமருளு டையோரோஞானிக ளென்றுஞ் சாதித்தது. இப் படிவாமியை மறுத்த வேளையிலவணி ருந்தபவுத் தன்சை வசித்தாந்தியை நோக்கிக்கூறுவான். இ ங்ஙனம் வாமியைநீர்மறு த்ததுஉபை யமதசித்தா ந்தமேஅஃதெங் ஙனமெனின் வாமியானவன்புலா லிச்சையினு லொன் றைக் கொன்ற ருந்துதலின வனதுசரித்திரத்தாற்புண்ணியமேயில்லை, யாதொரு ஞானியானவன் தானுக வொன்றையுங் கொன்ற ருந்த வொண் ணுது, வேறொ ருவன் ஒன்றினைக் கொன்றவற்றி னூனையூட்டிடினுகில் வாங்கிப்புசி க்கலாம். அஃதெப்படி யெனினொரு வன்தண்ணீ ர்ப்பந்தல்வைத் தாலந்த புண்ணியம் தண்ணீர்ப்ப ந்தல்வைத்தவனை யடைதலுந் தண்ணீர் குடித்த வனுக்கு தாகநீங்கு தலுமன் றிப்புண்ணிய மிவனு

க்கில்லாதது போலுமொரு சீவனைக்கொன்றவனு க்குத் தோஷமன்றித் தின்றவனுக்குத் தோஷமி மில்லையென்று கூறுதலுமவனை மறுத்துமேலுத்த ரங்கூறுகின்றார். (மேல்விடை) ஒருவன்றரவுணி னூன்கொலைதடுத்தாண்டுரைத் திடாயால் (எ-து) ஒருவனொருசீவனைக்கொன் றந்தமாங்கிஷத்தை யுனக்குப் புசிப்பிக்க நீபுசித்தாயாகி லுன்னையுமந் தப் பாவம் விடாது. அதேனெனி னீமாங்கிஷப க்ஷணியாதலினுன் னுடைய மனசுசீவ கொலையே யிச்சித்திருக்கு மதனாலொருவன் கொன் றிடுமிடத் திதுதோஷமென்று விதித்து விலக்கி னாலுனக்கந் தமாங்கிஷத்தை யூட்டா னென்பது குறித்துத்தோ ஷமென்று விலக்காயாதலானு ங்கொலையையிச்சித் ததோஷமாங் கிஷபக்ஷண தோஷங்கொலைதடுத் துப்பகர்கிலாத தோஷமிம் மூன்று தோஷமு மு னக் குண்டாமாதலி னெனக்கொள்க இதற்குப்பி ரமாணம்.— (சிவதருமோத்திரம்) உண்ணவூனை யி ரும்பியுயிர்க்கொலை - யெண்ணுவான் கொலைகண் டிரங்கான் கொலை-பண்ணு வானைத்தடுத் துப்பக ர்கிலா - னண்ணு வானிவரோ டெனுநால் வரும். என்றும் இதியாசம். கொன்றான் கொலச்சொனா ன்கூசவறுக் தானட்டான்-தின்றான் விலக்கிடான் சென்றென்றுகொன்றவனக் - குட்டவங் களிட்டெ

ரிக்க வெந்துகொடு வென்னரகிற் - பட்ட் ழுன்றுவீழ்வார் பதைத்து—என்றும் மற்றும் வருவனவற்ருற்காண்க. (இதன்கருத்து) ஆகாமியத்தைச்சுடுதலினுல் ஞானியக்கினிக் கொப்பென்று மாங்ஷெபக்ஷணியிரா கத்துவேஷ முடைய வனுகையாலக்கினிக் கொப்பல்ல வென்று மொருவன்கொன்றிடத்தின்ரு னெனினும் பாவமுண் டென்றுங் கூறியது. (கரு)

{ இப்படி கூறியசித்தாந் தியை நோக்கிமேலும் பவுத்தரிலேகதேசி கூறுவான். }

இங்ஙனமந்தப்பவுத்தன்கூறியவுரை பழுதுஅஃதேனெனி லொருவன் கொன் றிடத் தின்றுகொலை தடுத்துப் பகராமையால் யா தொருவன் சீவகொலை கண்ட விடத் திது தோஷமென்று தடுக்கவு மவனது கேளாமல் வந்த தோஷ மெனக்கு வரட்டும். நீருண்ணுமென் றூட்டினுற் புசிக்கலாம், நமக் கப்பொழுது தோஷ மில்லை யென்று கூறுதலு மதற்குத் தரங் கூறுகின்ருர்.

உரைத்து முருப்பயன்கொலைநீத்தொருவனைச்
சார்ந்தவர்க்கு நரகுளமண்ணுள்வோ
னிருத்தரையிற்பொருடிருடே லெனக்கவர்
வோனெடுந்தமர்வீய்ந்திடலிற்ருனெய்

மரித்திடினுமகத்தலதூன்றினலருளன்மை
யிற்றுயர்பின்மறலிதூத
ரருத்தனமெய்க்கலியின்மருந்துயிருயுங்கண்
டிதியிவற்றானருந்தறீதே.

(எ - து) உரைத்து முருப் பயன் கொலைதீ த்தொருவனைச் சார்ந்தவர்க் குநரகுள மண்ணுள் வோ - னிருத் தனை யிற்பொருடிரு டேலெனக்க வர்வோ ஞெடுந்தமர் வீய்ந் திடலில், (எ - து) கொலைதீதென்று சொல்லியு மச்சம டையாதவற் றினைச்செய்யு மொருவனை யாதொருவன் கூடியி ருந்த வன்றன் அன்னபானுதிகளைப் புசித்தா ளுகிற் புசித்தவனு மவனடையு நரகமடைவன், அஃதெ ங்ஙனமெனின், ஒருவனிராசா வினது பொக்கிஷ த்திற்றிருடு வோன வனதுசினே கராயிருந்துள்ள வர்கள வனைநோக்கி யிராசாவினது பொக்கிஷத் திற்றிருடுதல் மகாகெடுதி யதுசெய்ய வொண்ணு தென்ற விடத்துக் கேடுவந்தால் நானனு பவிக்கி றேனுங்கட்கென்ன நீங்களென் வீட்டிலிருந்துசுக மாயுண்டுக் கொண்டிருங் கோளென்றுலவன் வா ர்த்தையை நம்பியிருந்தவர்களு மவனோடு மரண மடைகு தல்போலு மெனக் கொள்க. இப்படி சொன்ன சைவசித்தாந் தியை நோக்கிப்பவுத்தரி ற்பின்னு மொருவன் கூறுவா னிங்ஙன மிவர்கள்

கொன்று தின்னலா மென்னு மதுவும்-பாவ-மொருவன்கொன்றிட தின்னலா மென்னு மதுவும்-பாவங்-கொன்றிடு மளவிற்கொலை தடுத்துக் கூறிப்பின்புதின்னலா மென்றுஞ் சொன்ன வார்த்தையெல்லாம்பழு தேயாவனு மினுமவன் கொலையினுலிறந்தசீவன தானைத்தின்ற ருகிற்கொன்ருற் பாவந்தின்றற்கு முண்டென்று கூறியவுலக வழக்கவுண்மை யிவனுக்குத் தோடமுண்டென்பது நிச்சயமிவையன் றித்தன்னியல் பாய்மாய்ந்த சீவன்தான்மண்ணினை மரத்தினை யொக்குமவற்றினைப்புசித்தானுகிற் பாவமில்லை. (மேல்விடை) தானுய்மரித்திடினு மகத்தலதூன் றினவருளன்மை யிற்றுயிர்பின்மறலிதூ தராருத் தனமெ.ப் (எ - து) தன்னியல்பாய்மாய்ந்த சீவனதானுயினும் யாகமல்லாவிடத்தூனருந்துத லெல்லா முயிர்களிடத் தருளல்லாத படியினுலே யூனினையுண்டு வந்தோனவற்றினதிச்சை யான்மற் ெருருசீவன் களுக்குமரணம் வந்தவிடத்து மிரங்காது சந்தோஷத்தை யடைவனுதலினதுவுங் கொலையேயாதலி னெவ்வித த்தாயினும் புலாலுண்போர் நரகத்தின் கண்யமதண்டமடைகுதலே சத்தியம். இதற்குப் பிரமாணம்-திருவள்ளுவர். படைகொண்டார் நெஞ்சம்போனன்றூக்கா தொன்றி - னுடல்சுவை யுண்டார்மன

ம், பொருளாட்சி போற்றுதார்க் கில்லை யருளா
ட்சியாங்கில்லை யூன்றின்பவர்க்கு. அன்றியும், செ
யிரிற்றலைப்பிரிந்த காட்சியாருண்ணு-ருயிரிற்றலைப்
பிரிந்தவூன். அன்றியும், உண்ணுமை யுள்ளதுயிர்நி
லை யூனுண்ண - வண்ணுத்தல் செய்யாதளறு. எ
ன்றும் ( திருமந்திரம் ) பொல்லாப்புலாலைநுகரும்
புலையரை - யெல்லாருங் காணவிய மன்றன்றூது
வர் - செல்லாகப்பற்றித் தீவாய்நரகிடை - மல்லா
கத்தள்ளி மறித்துவைப்பாரோ என்றும் [இ ‥ பாசம்]
இட்டவினையாசை யாற்றியமீன் றூண்டில்வாய்ப்-
பட்டுதேநாவிரசம் பார்த்துலகர் கட்ட-விருளாரு
லகத்தி லெய்துவர்க ளென்று-னருளாரு நெஞ்சத்
தவர். என்று-மற்றும் வருவனவற்றுற் காண்க.—
எவ்விதத்து மூன்றினல் நரகமென்பனவற்றுன்பிரா
ணஆனிவரினும் விஷம்போலக் கண்டுநீங்கவேணு
மென்பன வாயிற்று. மற்ருெருவர் தெண்டினையா
ன்வந்துகூடினும் விடமுண்டவன் மாற்றவவிழ்தந்
தேடுதல்போலு முடனேபரிகாரஞ் செய்யவேண்டு
மென்பனவாயிற்று. இத்தன்மை யாதலினூனுண் ணு
ர்க்கூட்டு தலுமகாபாவமென்பன வாயிற்று. இதற்
குப்பிரமாணம், கொன்றி லாரைக்கொலச் சொலிக்
கூறினுர். தின்றிலாரைத் தினச்சொலித்தெண்டித்
தார் - பன்றியாய்ப் படியிற்பிறந்தேழ்நர-கொன்று

வாரீ ஞானபிதுண்மையே — அன்றியும், கொலை யஞ்சாதொரு வர்க்கஞ்சிக் கொன்றுளோர்-சிலர் சொல்லஞ் சிப்புலாலினைத்தின்றுளோர் - நிலையதா ய்நரகத் திடைநிற்பரொன் - றலகினூன் மறையோ வென்றறையுமே.—என்றுமற்றும் வருவன வற்றாற் காண்க—இப்படி சமயிகளுக்குத் தரங்கூறிமறுத்த காலையில் கற்றறிமூடனாகிய வொருலவுகீகன்சித்தா ந்தியை நோக்கி நீரிங்ஙனங் கூறியவற்றுள் வேள்வி ம. ந்திரம் விதிதமாய்க் காட்டி மற்றெவ்விடத்தும் புலாலுண்டல் நரகமென்று கூறினீரதுகூடாது அ வ்வேள்விபோலும் திதிசெய்யுமிட மருந்துண்ணுமி டம் பிராணனுய்யுமிட மிவைகளினும் புலாலுண் ண விதியுண்டென்று வேதாகமநூலி னிருத்தலின் (மே/ விடை) இக்கலியின்மருந்திலுயிருயுங்கண்டிதி யிவற்றானருந்தறீதே. (எ-து) வேழ்விபோலுந் திதி யாதிகள் சாத்திரவிதிதமாயினு மிக்கலியுகத்தில் ம ருந்திலுயிருய்யுமிடத்திற் றிதியிற்புலாலுண்ணவொ ண்ணு தென்று புராதனவிதிதமாய் நடந்துவருதலி ன்அவற்றினைச் செய்குதலுங் குற்றமென்றறிவாயா க- (இதற்குப்பிரமாணம்) அருட்பிரகாசம், மருந்தி ற்றிதியினுயிருய்யும் வாயின்மகமதனி னருந்தற்கிய ல்பதெனினுங் கிருதுவினன்றியுளம், பொருந்திப்பு லாலுண்பரோகலியூடறம் பூண்டிமையோர், விருந்தி

ற்சிறந்தமுதூட்டப் பொன்னூட்டுற வேண்டினரே, என்றுங், (காசிகாண்டம்) அருமகத்தன்றியூன்சுவைத்துடலம் வீக்குவோனதற்குடன்படுவோன், கருவியிற்குறைத்தோன் பகர்ந்துளோன் கொணர்ந்தோன்வியந்துளோன் கடிகெனவேவுந், திருவிலியதனையட்டவனிவர்க ளெண்மருந் தீநரகடைவர், பருவினூன்விடுத்தோர் நாடொறும்புரவி மகம்புரி பலன்பெறுகுவரால் — அன்றியும், குழைமுகந் தூங்குஞ்செம்மணிப் பசும்பொற்குண்டல வேதியர்நாளு-மழன்முகத்தாற்றுமருமகத்தன்றிச் செந்தசை யருந்தினரில்லை- விழைவொடும் பயந்தோர்ப்பழிச்சிடாரில்லை வெங்கவருடனரில்லைக்- கழிபெருங்குணத்துக் குரவனைப்பிழைப்போ ரரும்பொருள்கவருனரில்லை. என்றும்வருவனவற்றுற் காண்க — [இதன்கருத்து] கொலைஞனாச்சினேகித்தலும்பாவமென்றும்எந்தவிதத்தினும் மாங்கிஷபக்ஷணம் நரகமேவிளைக்குமென்றும் விதியுண்டாயினும் கலியுகத்தின் கண்யாகத்தன்றி மற்றேரிடத்தினும் புலாலுண்ணவொண்ணுதென்றுங் கூறியது. (கரு)

{ இப்படி கூறிய சித்தாந்தியை நோக்கிப் பின்னுங் கற்றறிமூடன் கூறுகின்றான். }

யாகாதிநான்கிடத்தினும்புலாலுண்ணலாமென்று

விதியிருக்க யாகத்துண்ணலாமென்று மற்றிடத்தா காதென்றுங் கலியுகத்தைக்குறித்து புராதனவிதித மென்றுதள்ளுதலும் பழுதென்றளவி லவனைநோக்கி மேலுத்தரங்கூறு கின்றார்.

அருந்தனையன் றனைமனைதோள் பிறர்க்கீய்ந்தும்
பெறுவதழகக்கா லிக்காற்
பொருந்துமதோ விக்கலியீன் டுணர்ந்தன்
றேதமதாசாற் பூசித்தன்றேன்
றிருந்துமனைப் பதமலராற் றீண்டிலதர்ச்சனை
நாளுஞ்செய் தார்மைதீ
ரிருந்தவருநிமலத்தை மலத்துளமென்றுணி
னூனுக்கிடிதியூனே.

(எ - து.) அருந்தனையன் றனைமனை தோள் பிறர்க்கீய்ந்தும் பெறுவதழகக்காலிக்காற் பொருந்துமதோ, (எ - து) கலியுகத்தைக் குறிக்க வொண்ணாது யெந்தக்காலத்தாயினும் விதியிருந்தபடி செய்யலாமென்று நீ சொல்லுவையாகில் யாதொருவனும் பிதிர்கருமஞ் செய்யும்பொருட்டுப் புத்திரனைப் பெருனுயினற்கதியில்லை யாதலிற்புத்திரரில்லாத செல்வஞ்செல்வமே யல்லவென்று நூல்களெல்லாங் கூறுதலிற் றனக்குப்புத்திரோற் பற்றியில்லாத விடத்துத் தன்னுடைய ஸ்திரீயைப்பிறருடன் கூட்டியும்

புத்திரனைப் பெறலாமென்றும் பொருள்கொடுத்த லினானுந் தேத்தங்கவர்தலினானு மொருவர்மக வெ ளைப்புகுதலினானுந் தனையர்செயிருத்தலினானுந் தன் னாலொருவனாவியுய்தலினானுங் கிடைத்த புத்திரரு ந்தனக்குப்புத்திரரோ வென்றுங்கூறிய எழுவகைப் புத்திரரிற் றன்னுடைய ஸ்திரீவயிற்றிற்பிறந்தபுத்தி ரரோ விசேஷமாதலிற் றன்னுடைய ஸ்திரீயைப் பிற ரோடு கூட்டியும் புத்திரனைப் பெற்றுவாழுதல் கலி யுகமல்லாத யுகங்களுக்கெல்லா மிகுதியுஞ் சிறப்பா கவழங்கும் அந்தவிதியுனக்கிந்த கலியுகத்திற் செய் யக்கூடுமோ வாதலிற்காலத்துக் கேற்ற விதிநடக்க வேண்டுமெனக் கொள்க. (இதற்குப்பிரமாணம்.) காசிகாண்டம் — எத்திருவுடையரோனுமின் கனிம ழலைச் செவ்வாய்ப் - புத்திரனிலாதோ ரொன்றும் பொறியிலராயவற்றான்- மெய்த்தவம்புரிந்து மைந் தர்ப்பெறுவதேவிழைவயாரு- முத்தநன்மகவு மோ ரொழ்பான்மையா யுரைப்பர்மோலோர். அன்றியும், மனைவிதன் கொழுநற்கீன்றோன் மற்றவனருளினா லே - யனைய வளயலார்க் கீன்றோ னரும்பொருள் கொடுத்துக்கொண்டோ - னினிதுறு தேத்தனமந்த ன் மகவெளைப்புகுந்தமைந்தன்றனையர்செய் தன்னா லாவிபுய்ந்தான் றனையராவார். என்றும் பிர்மோத் திரகாண்டம். காவலன்றனக்குப்பின்னோர்கான்மு

ளையில்லை யென்று பூவலயத்தினுள்ளோர் புகல்வது
ம்பொருந்தார்வீறும் - யாவையுமுணர்ந்த நீதிவசிட்
டனங்கியல்பினுய்ந்து - பாவருந் துயரந்தீர்க்கும்ப
டி.நினைந்தினைய செய்தான் அன்றியும். அருந்ததிய
னையகற்பின் மதையந்தியணங்கனுடோள் பொருந்
தியின் கலவித்துய்த்தோர் புதல்வனைத்தந்துதீரா-
விருந்துயருலகந்தீர வியற்றினன் முனிவனிப்பால்-
பெருந்தகை தவஞ் செய்வானைப்பேய் மகளொரு
த்திப்பற்றி. என்றும் வருவனவற்றுற்காண்க —பின்
னுங்கற்றறிமுடனை நோக்கிக்காலகர்மம் நடக்கவே
ணுமென்பதற்கு வலியுறுத்திக் கூறுகின்றார்.— (மே
ல்விடை) இக்கலியீண் டுணர்ந்தன்றேதமதாசாற்
பூசித்தன்ஞேன் றிருந்து மனைப்பதமலராற்றீண்டி
லதற்சனை நாளுஞ்செய்தார் மைதீரிருந்தவரும்.—
(எ - து) இக்கலியுகத்தினது வலியினை யுணர்ந்தன்
றோ தம்முடையவாசாரியரை விதிமுறையே முன்ப
பருச்சித்துப் பின்னுமவரதுதேவியையர்ச்சிக்குமிட
த்தவளது பாதகமலங்களைக் கையினுற்றீண்டாது
அணுகிநின்று மலர்தூவிநாடோறு மர்ச்சிக்கவுஞ்செ
ய்தனர் மயக்கந்தீர்ந்த பெரியோர்களுமெனக்கொ
ள்க. இதற்குப்பிரமாணம் - சைவசமயநெறிவிளக்
கம் - ஆசான்மனைவியை யடிதீண்டாதர்ச்சிக்க வா
சார்மலரால் மதித்து. அன்றியும்- அந்தயுகந்தோறு

மடிதிண்டி யருச்சிக்கைதகு- மிந்தக்கலியுகத்தேயா
று. என்றுமற்றும் வருவனவற்ருற்காண்க. இப்படி
கூறிய சித்தாந்தியை நோக்கிக் கல்லாதமூடனுகிய
லவுகிக னொருவனெழுந்து நின்றங்ஙன மிருந்த ச
பையையெல்லாம் கையமத்தி ஒன்றுசொல்லுவானு
ன்னுடைய நோஞ்சாஸ்திரங்க ளெல்லாம் புறத்தி
லே போட்டுவிடு நானொருபேச்சு சொல்லுகிறேன்
கேளதேதென்ருல் உடம்பிலே யிருக்கிற மாங்கிஷ
த்தை யெல்லாமுதிர்த்துப்போட்டு எலும்புமாத்திர
மாயிருந்தாலல்லோ மாங்கிஷம் விட்டதற்கடையா
ள்ம் நீயாயிரந்தான் சொன்னுலு மாங்கிஷதேகத்தி
லே யிருக்குந்தனையு மாங்கிஷம் விட்டேனென்கிற
தேபொய்-மனுஷனுய்ப் பிறந்தவனெல்லாம் விழுசு
வருக்கு மண்போடுகிறதுபோல மாங்கிஷதேகத்து
க்கு மாங்கிஷமேதின்னவேணு முன்பேச்சை மெய்
யென்றுகேட்டு மாங்கிஷத்தை விட்டவன் கெட்டு
ப்போகிறவனல்லாமற் பிழைக்கிறவனொருக்காலுங்
கேழ்க்கவே யொண்ணு தென்றளவி லவனைநோக்
கிக் கைகொட்டிச் சிரித்து மேலுத்தரங் கூறுகின்ரு
ர். (மேல்விடை) நீமலத்தை மலத்துளமென் றுணி
னுனுக்கிடுதியூனே, (எ - து) அடா நீசொன்னது ந
ல்லதுதானே மாங்கிஷதேகத்துக்கு மாங்கிஷமே
போடவேணுமென்ற நீ இதுமாத்திரஞ்செய்யாமல்

ருந்தது குற்றம் - அஃதேதென்று கேட்பாயாகில் சொல்லுகிறேன் மலத்தை வயற்றில்வைத்துக்கொண் டிருக்கிறாயல்லாமல் அத்தைவிட்டு நீங்கியிருந்தவி டந்தானில்லையே அப்படியிருக்கப் பசிவந்தநேரத்தி ல் மலத்துக்குமலமே யிடவேணுமென்று புறத்தியா ரிடமலத்தை பட்சணம்பண்ணுமலிருப்பதே னதுவ ன்றி மலம்விட்டநேரங்களினு மருவருத்துக் கால் கைசுத்திபண்ணுவதே னிப்படிசெய்யாம லிருக்கிற நீ மாங்கிஷத்துக்கு மாங்கிஷமிடவேணுமென்பது கூடாது. இதற்குப்பிரமாணம்.— (திருவள்ளுவர்) தன்னூன் பெருக்கற்குத்தான் பிறிதூனுண்பா னெ ங்ஙனமாளுமருள், என்றும் (காசிகாண்டம்) புழு வந்தசையும் வெண்ணிணமும் பொதிந்த குரம்பை வீக்குதற்குக்- கழியூனுகர்ந்தோர் கொடுநரகிற்கற்ப காலங்கிடந்தழுந்தி - விழைவின் முன்னர்த்தானுக ர்ந்த விலங்குமவர்தம் மெய்த்தசையை - யழிவெம் பசியாற் பறித்தருந்து மென்னும்பான்மை யறிந்தே யோ. — என்றுமற்றும் வருவனவற்றுற்காண்க. இ ங்ஙனம் லவுகீகருக்கெல்லாந் தூலவுத்தியாகச்சொ ல்லி மறுக்கவேண்டியது மவரதடங்காமையைக்கு றித்துக் கூறினானெனக் கொள்க. சித்தாந்தியார்கை கொட்டிச் சிரித்தாரொன்றுரையில் வருவித்தது மங் ஙனங்கூறும் லவுகீகரது, தூலவுத்தியைக் குறித்து

எடுத்துக்கூறிய தெனக்கொள்க. இங்ஙனமுறை மிக வுந்தூல வார்த்தைகளாக விரிக்கவேண்டியது மவ ரதிருதய நுட்பங் காட்டிடுவதற் கெனக்கொள்க. இதன்கருத்து முற்காலவிதி யிக்காலத்திற் செல்லா மையாற் காலத்திற் பொருந்திய விதிநடக்கவேண் டுமென்று மலத்துக்கு மலமிடலாமாகின் மாமிசத் துக்கு மாமிசமிடலாமென்றுங் கூறியது. (கஎ)

{ இப்படிசொன்ன சித்தாந்தியை நோக்கி
ப்பின்னுமொரு லவுகீகன் கூறுகின்றான். }

இங்ஙனமிவன் மனிதனாய்ப்பிறந்தவ னெல்லா மாமிசத்துக்கு மாமிசமேயிடவேண்டுமென் றறியா மற்சொன்னான். அப்படிசொல்லிற் பாவமல்லவோ ஒருநல்லவன் பொல்லாதவன் ஒருபார்ப்பான்பட்ட ன்முதலான நாலுசாதிகட்கு மொன்றாகச்சொல்ல லாமோ மாமிசந்தின்னுகிறசாதி தின்னவேவேண்டு ந் தின்னாதசாதி யொருக்காலுந் தின்னவேயொண் ணாது தின்னுகிறசாதிவிட்டாலும் பாவந்தின்னாதசா திதின்றாலும் பாவமென்றுசொல்ல அவனைநோக்கி ச்சித்தாந்தியார்சிரித்து மேலுத்தரங் கூறுகின்றார்.

உ௯ னுணுஞ்சா திகள்மிருகா திகளறம்பூண்
டவையுளுமுன் பொழுகிற்றுனீ
தானெனவூன் றினல்பழுதோ ரிழிவுபிதாப்
புரியின்மைந்தர் தாமுஞ்செய்யார்

மானிலத்திற் பாலர்பித்தர் தெளிந்துமிழுக்
கியற்றினுண்டோர்மறுக்கொணுது
றுன்மவிச்சை கருதிமுறை யல்லா னைத்தோ
ய்ந்துறினூனருந்தல்செய்யே.

(எ - து.) ஊனுணுஞ்சாதிகள் மிருகாதிக ளறம்பூண் டவையுளுமுன் பொழுகிற்றுனீ - தானென வூன் றினல்பழுது (எ - து) அடா நீ சொன்னது சுபாவந்தான் தின்னுஞ்சாதி தின்னுவிடினுந் தின்னுதசாதி யொருக்காலுந் தின்னவே யொண்ணுது. தின்னுஞ்சாதி எது தின்னுதசாதி எதுவென்று கேட்பாயாகில் பூதப்பசாசு நாய்நரி கோட்டான் பாறுகழுகு பருந்து காக மீ யெறும்பு முதலியவைகள் யாதொரு பிணங்கிடக்கக் கண்டவிடத்தி லதினுடைய அசுத்தத்தையுஞ் சூனை நாற்றத்தையும் பார்த்துச் சற்று மருவருப்பின்றிச் சூழ்ந்து கொண்டு பிடுங்கித்தின்னுதலினுனு மிதுநல்லது பொல்லாதென்று மிது புண்ணியபாவமென்று பகுத்துங் கேட்டு மறிதற்கொரு விவேகமில்லாத படியினுலேயும் அவைகளே தின்னுஞ்சாதி - வேதாகமங்களைக் கேட்டுப் பாவமிது புண்ணிய மிது வென்றறிந்து புண்ணியத்துக்குள்ளும் பாவத்துக்குப் புறம்பு மாக நடந்து போக மோக்ஷங்களை யடையவேண்டினவ னுதலான் மனுஷனே தின்னுதசாதி தின்னுஞ் சாதியாகிய மிருகா

திகளுள்ளும் பசுவினதுபதேசத்தால் முன்பொருபு லி கொல்லா விரதியாய்ப் பூர்வ சனனமு முணர்ந் துயோகத்தா னற்கதியடைந்ததென்று முன்பொரு நாரை கொல்லாவிரதியாய் ஞானமு முடைத்தாய் மதுரையை யடைந்து சிவசாருபம் பெற்றதென்று மற்றுமொரு கபோதந் தனது பேட்டினைக்கவர்ந்து ள்ள வேடனது பசிநீக்கி யுயிர் புரப்பான் பொருட் டுநெருப்பில் வீழ்ந்திறந்து பரலோகமடைந்ததென் றும் அகஸ்தியராதிரிஷிக ளாசிரமங்கடோறு மிருந் துள்ள மிருகபக்ஷிகளெல்லாம் ஞானநெறி பூண்ட ருளொடு விளங்கிற்றென்றும் வேதாகமபுராணாதிக ளிற் கூறுதல் கேட்டிருந்துந் தின்னாத சாதியாகிய நீதின்னுஞ்சாதியென்று கொண்டு பாவங்களுக்கெ ல்லாந் தலைமையாகிய கொலையை மேற்கொண்டொ ழுகிப் புலாலினை யருந்தி நரகிடைவீழ்தற் கென்னு தன் மிகுதியுங் குற்றமென் றறிவாயாக.—மிருகாதி கள் தின்னுஞ்சாதி யென்பதற்குப் பிரமாணம்.— (சிவதருமோத்திரம்) நாயினுக்கும் பேயினுக்கு நரி யினுக்குங் கழுகினுக்கு - மீயினுக்கு மினிது பிணமெ னிலதுதா னினியதுவோ-வாயினுக்கு மனத்தினுக்கு மதிப்பரிய மாதேவன் - றேயினுக்கே சிவமதனைத்தி னைப்பாரோசிறந்தாரே.— என்றும் (புலால்மறுத்தல்) நாய் கழுகு கூகை நரி காகமீ யெறும்பு-பேயிவைக்

ளாவி பிரிந்தவூ னேயமொடு - தானருந்த லல்லாது சற்காரியமனிதர் - தானருந்தலாவதோதான். என் றும்-தவகதியை வேண்டுபவருயிரில் சடந்தின்றவிர் கதவமழித்தாங் - கவகதியை வேண்டுபவர் கழுகு நரிசெயுந் தொழிலை யயராநாடச் - சிவகதியுந் திரு மாறன் றெவகதியு மயன்கதியுந் தெய்வலோகத்-து வகதியு மிகந்தெரியுந் துற்கதியின்வீழ்வர் பரஞ்சோ தியாணை என்றும் புலால் மறுத்தல்.. பிணங்கிடக்க நானுகரோ னென்று நீபேசுங்-குணங்கிடக்க வேண் டியதென் கூறாய் பிணத்தைக்-கலத்திலே யிட்டுக்கல ந்துநாவாரப்-புலத்திறுற்றின்றாய் புகல். என்றுமற் றும்வருவனவற்றாற் காண்க—மிருகாதிகளினு மோ ரொன்று கொல்லாவிரதத்தால் நற்கதியை யடைந் ததென்பதற்குப் பிரமாணம்— (திருவிளையாடல்) பி ரிவறக்கொன்று தின்னுங்கடைப்படும் பிறப்புநாரை வரனுறு தேவராகி வான்றொழவிருப்பக்கண்டா, க ருதிநீங்கென்றும் பொல்லாக்கடையராயினுங் கொ ல்லாம - ரைவனவந்திப்பரோல் வாளுள்வதற்கையமி ன்றே என்றுங்காசிகாண்டம். கொன்றுவிலங்கின் றசை நுகருங்கொடுமையோரவ் விலங்கினுட - று ன்றியமயி ரொத்துணையா மத்துணைய காலம் வெந்நர கி-ஞென்றி நுகர்வாய் புழுவொழுக வுழப்பரொன் கையுணர்ந்தேயோ - கன்றுசினவெங் கொடுவிலங்

கும் புலவூன்றின் னக்கருதாவால். ஒருமீன்புலவுவா ய்மடுப்பினுைழியுந் தசைகளனைத்தினையும் - பரிவா னுகர்ந்தோர் வீழ்கின்ற பாழ்வெந்நரகிற் படிவமொ னு-மருமாமறையின் பொருடேர்ந்தோ வந்தாமரை நாண்மலர் பொதுளும்-விரிநீர்வாவி பயில் மீன்கள் விழுங்காதுலவும் புள்ளினமே. — (இதியாசம்) பு ள்ளுக்குள குணமுமில்லாத புல்லறிவாங் - கள்ளக் கருமனத்தே காலன்கைக் - கொள்ளப் போய்ப்- புக்காழ் நரகத்துழையாது போனுன் மற்—றெக்கா லத் தெந்நாளினி, என்றும் (அருட்பிரகாசம்.) புலி நாரை யெண்புறவாதிகண் முன்னம் புலாலருந்துங் குலனுயிருந்து மருளோம்பி முத்தி குறுகிய தென்- றுலகூடுரைப்பசொற்கேட்டு மருளற்றுழன் றிறக்கு ஞ்சிலர் மானிடத்தென்ன செய்வான் புலியிற் செ னித்ததுவே என்று மற்றும்வருவன வற்குற் காண் க.—இப்படி கூறிய சித்தாந்தியைநோக்கிப் பின்னு மொரு லவுகிகன் கூறுவான்.—இங்ஙனமிவன் றின் றைத சாதியென்றுந் தின்னுஞ் சாதியென்று மறியா மற் சொன்னுன் யாதொருவனுக்குஞ் சாதியைக் கொண்டு காரியமென்ன இந்தப்புத்தி முன்னிருந்த வர்களறியாம னடந்தார்களோ அவர்களைக் காட்டி லுநாமென்ன வாகாசத்திலே பறக்கிறோமோ, எத்த னையானலுந் தாயுந் தகப்பனும் எந்தப்பிரகாரம் நீ

டந்தார்களோ அந்தப்பிரகாரத்திலே நடக்கிறதே காரியமென்ற அவ்வி லவனைநோக்கிச் சிறிதுத்தர மேற் கூறுகின்றார் (மேல்விடை) ஓரிழிவு பிதாப்புரியின் மைந்தர் தாமுஞ்செய்யார் (எ-து) அடா பிதா நடந்த முறையே நடக்கவேண்டு மென்பது கூடாது - அதேதெனனிற் றன்னுடைய பிதாவேனும் பிறரேனும் வேதாகமங்களை யோதி யுணர்ந்து தருமத்துக்குள்ளும் பாவத்துக்குப் புறம்புமாகத் தானு நடந்து பிறரையு நடப்பிப்பான் யாவனவனையே யறிவுடையோர் பிதாவென் றங்கீகரித் தவனடந்த முறையே நடவாநிற்பர்க ளதுவன்றித் தன்னுடைய பிதா மகாபாவியானாலு மவனடந்த முறையே நடப்பது சிதமல்ல நீ யுசிதமேயென்னி லொருவனுடையபிதாவானவன் முன்னே கன்மவசத்தாற் பிறர்கேட்கில் மிகவு நகைத்து நாணுத் தருவதாகிய விழிவினைச் செய்யா நின்றதை யோருமிடத்துயீ னவினையடைந்திருப்பானாகி லதுவேயொழுங்கென் றவனுடைய பிள்ளைகளு மப்படியே செய்யக்காணே மாதலின் வேதாகமங்களை யாராய்ந்த நாதாக்களது புத்தியின் வழியே நடப்பதே விவேகம் (இதற்குப்பிரமாணம்) தந்தை நடந்துள முறையே நடப்பதொழுங்கெனி ளொருவன் றரணிமீதே - நிந்தைதரு புருடசம்பனுதி செய்தானெனி லதுவேநெறியென்றன்

ளுன் மைந்தர்பினும் புரிவதில்லை யெவரோனுந்தருடி நெறி வழுவிலோரோ யந்தமிகு தாதைகண் மற்றவர் நடந்தநெறி நடப்பதறிவாமன்றே (என்றும் வருவன வற்ருற்காண்க) இப்படிசொன்ன சித்தாந்தியை நோக்கிப் பின்னுமொரு லவுகீகன் கூறுகின்ருன். இங்ஙன மிவன் பிதா நடந்த படியே நடக்க வேண்டுமென்றறியாமற் சொன்ஞன். பிதா பிச்சை யெடுத்தானென்று மகனும் பிச்சை யெடுக்க வேண்டுமோ அது தேவையில்லை யெவனுனலும் பிறவி யன்பாய் மாமிசம் விட்டவனே விட்டவன் - சிலகாலந்தின்று கொண்டு திரிந்து நடுவாந்தரத்திலே யெனக்கு ஞானம் வந்ததென்றுவிட்டு விட்டாளுகி லொன்றும் பலனில்லை அப்படி விடுகிறபொழுது முன்னந் தின்ற வாயையுங் கையையுங் கூடவிட்டு விட வல்லவோ வேண்டு மல்லாத பொழுது விட்டதிற் கூட்டேயல்ல. ஆனபடியினலே தின்றவன் தின்றே வரவேண்டும் நடுவாந்தரத்திலே விடவொண்ணு தென்ற வளவிலவனைநோக்கிச் சிரித்து மேலுத்தரங் கூறுகின்ருர். மாநிலத்திற்பாலர் பித்தர்தெளிந்து மிழுக்கியற்றினுண்டோர் மறுக்கொணுதான், (எ-து) அடா நீசொன்னது நல்லதுதானே இப்பூமியி னிடத்தொருவன் றன்னை நீ குழந்தையாயிருக்கிற காலத்தில் மலத்தைத்தின்ருயென்று அவன்பெரியவனு யிருக்கிறகால

த்தின் முன்கண் டிருந்தவர்கள் சொல்லக்கேட்டா
னுகி லறியாதகாலத்திற் செய்ததை யிப்பொழுதுநீ
சொல்லலாவ தேதென்று கோபிப்பானன்றி முன்
புதின்ற வாயுங் கையு மிருக்க வினிவிட்டதனுற்பிர
யோசன மில்லை யென்று பின்புந்தின்னக்கண்டிலே
மதுவன்றியிலு மொருவனைப்பயித்தியந் தொடுத்தி
ருந்தகாலத்தில் மலாதிகளையுந் தின்று தின்னுதவீடு
களினும் வாங்கித்தின்று கொண்டு திரிந்தானேயா
னாலும் பயித்தியந் தெளிந்தகாலையில் தின்னுதவீட்
டினும் வாங்கித்தின்று மலாதிகளையுந் தின்னக்கா
ணமதுவன்றியு முலகத்தின் கணுண்டாகியபெண்
ணுமாணுஞ்சிறுபிள்ளையா யிருக்கிற காலத்திற்சீலை
புடைவையுடுத்தாமலபிமானம் பலருங்காணத்திரிந்
தார்களாயினும் பெரியவர் களான காலத்தினுஞ்சி
றுபோதிற் பலருங் கண்டவபிமானத்தை யினியெ
ன்ன மறைக்கிறோ மென்று பின் புஞ் சீலையுடுத்தா
மலிருக்கக் காணேமிதுபித்தனுக்கு மொக்கு மாத
லின் மாமிசந் தின்றவன் றின்றே வர வேண்டு
மென்கிறது தேவை யில்லை விவேகம் வந்தபோ
துவிடுகிறதே யோக்கியம். இதற்குப் பிரமாணம்
(திருவிளையாடல்) முன்னை வேதனையை விட்டுமுற்
றியவறிஞர்நெஞ்சிற் - பின்னொரு விகாரமின்றியிரு
ப்பரிப்பிணப் புலாலை - நன்னெறியறிந்த நாமுநா

வழியொழுகிக் கெட்டேந் - தின்னவேநயந் தோந
ம் போற் றீங்குளா ருண்டோ வின்றே. என்றும்
(புலான்மறுத்தல்.) அருந்திச் சின்ன ஊனதன்மே
ல்விடுக்கின் - வரும்பயனே தென்னின் மழலைதிருந்
தறிவிற் - பித்தரறிவு பிறங்கியபோதும்மலத்தைத்-
துய்த்திடு வதுண்டா யிற்சொல். என்றும், மைந்
தர்கண்மாதர்கள் கோச பகமாதிமழவுருவின்மறை
த்திலேமென் - றிந்தவுடை கொடுமறைப்ப தெத்தி
னுக்கென்றுளிர் பருவத்தெறி கலார்தஞ் - சிந்தை
யிறைண்மிருத் தணிவராதலினூ னுணலவை முனந்தி
ன்றுயேனு - நிந்தை செய்திப் பொழுத கற்றத்தகு
மிலையேற்கெடு வாயுன்னினை வென்றுமேஎன்றுமற்
றும் வருவனவற்றுற்காண்க இப்படி சொன்னதை
வசித்தாந்தியை நோக்கிப்பின்னு மொரு லவுகீகன்
கூறுவான். இங்ஙனம் பிறவியன் பாய்மாமிசம்வி
ட்டவனே விட்டவனென்றும் நடுவாந் தரத்திலே
விடுகிறது பாவமென்றுமிவனறியாமற்சொன்னான்,
மாமிசத்தை யெப்போது விட்டாலும் விடலாமதற்
குத்தேவை யில்லை விடுகிற பொழுதொரு வனுக்கு
மாமிசத்தைவிட்டுப் பார்க்கவது தக்காமற்போனால்
மாமிசத்தை தின்னாமல் விட்டுவிடவேண்டுந் தக்கி
ணதேயானால் விட்டுவிடுகிறது தோஷம். அதெப்
படி யென்றால் ஆன்மாவிற் கிச்சை யில்லாமற்போ

னுற்றக்காதே போமிச்சை யுண்டானதே யானு
ற் றக்கிப் போம் தக்கிப் போனவனும் விடுகிறபொ
ழுதான்ம விச்சையை யடக்க வேண்டு மாதலா
ல் ஆன்ம விச்சையை யடக்கிறதே மிருந்த பா
வம். ஆன்ம விச்சையை யடக்கவே யொண்ணு
தென்ற வளவி லவனை நோக்கிச் சிரித்து மேலு
த்தரங் கூறுகின்றார். ஆன்ம விச்சை கருதி முறை
யல்லாரைத் தோய்ந் துறி னூனருந்தல் செய்யே
எ - து அடா நீ சொன்னது சுபாவந் தானே - ஆன்
ம விச்சையை யடக்க வொண்ணு தென்கிற பொ
ழுது உலகத்தின் கண்ணே யாணுக் காயினும்பெ
ண்ணுக் காயினுங் காம விகாரத்தி னுலே மாதா-
பிதா - தம்பி - தமையன் - தங்கை - தமக்கை-யித்
தியாதி பேர்க ளிடத்திலே யொருவ ருக் கொருவ
ர் மேலிச்சை யுண்டானதே யானு லான்ம விச்சை
யை யடக்க வொண்ணுது அடக்கிற் ருேஷ மெ
ன்று கூறினுல் விஷை யானந்த மில்லாதே போகு
தோ வுண்டா யிருக்கவும் அப்படி வந்த காலத்தி
ல் மிகவு நடு நடுங்கி நரகத்தில் விழப் போகிருே
மென்று பயப் படுகிற படியினுலே யும் பிறர் கே
ட்டால் நிந்தை வருமென் றஞ்சுகிற படியினுலே
யு மூனுண்டலு மிருந்த பாவ மாதலின் யாதொ
ன்றுஞ் செய்யுங் காரிய முந் தவிருங் காரியமு

மறிந்து நடக்க வேண்டு மென் றறி வாயாக (இதற்குப் பிரமாணம் ) திருவள்ளுவர் - செயத்தக்க வல்லசெயக் கெடுஞ்செய்தக்க – செய்யாமையானுங் கெடும் – என்றும், ஔவையார் – பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர் - என்றும் ஆசுறு மான் மவிச்சை யடக்குத லாகா தென்று – மாசுறு மூனைத் துய்த்து மாதுயர் நரக மாழ்வீர் – பேசிய தந்தைதாய்மேற்பெருகிய வாசைகூறிற் – கூசிடாதவர் கடம்மைக் கூடுதல்குணமோகூறீர் - என்று மற்றும் வருவன வற்றுற் காண்க — ( இதன்கருத்து ) மாமிசந் தின்னுஞ் சாதி மனிதரல்ல வென்றும் யாவராயினு நல்லறிவாளர் நடந்த பிரகாரமே நடக்க வேண்டு மென்றும் விவேகம் வந்த போதே மாமிசபக்ஷணம் விட்டு விட வேண்டு மென்றும் பிராண ஆனிவரினு மாமிச பக்ஷணம் பாவமாதலால் அவற்றினைப் புசிக்க வொண்ணு தென்றுங் கூறியது. (கஅ)

இப்படி சைவ சித்தாந்தியார் யாதொன்றுமாராய்ந் தறிந்து நடக்க வேண்டு மென்ற மாத்திரத்தில் அந்த சபையின் கண்ணே யிருந்த சகல சமய வாதிகளும் எழுதின சித்திரங்கள் போலவும் காற்றில்லாதவிடத்தி லிருக்கிற விளக்குப்போ

லவும் அசைவற விருந்தார்கள் அப்போ தந்த சபை எப்படி யிருந்த தென்னில் அலை யொழிந்த சமுத்திரம் போல ஓசை யடங்கி யிருந்தது அப்படி யோசை யடங்கி யிருந்த தென்று விரித்தது வாதிகள் வினு வொழிந்து மேல் மாணுக்கன் வினு வருவித்த தெனக் கொள்க. முன்பு சைவா சாரியாரை தொழுது அஞ்சலி யஸ்தனுய் நின்ற பக்குவியான வன் பின்புந் தெண்டன் பண்ணி யொரு விண்ணப்பஞ் செய்யா நின்முன் தேவரீ ரிங்ஙனந் திருவுளம் பற்றி யருளிய வுபதேசப் படியே யடியேன் இன்று முதற் கொலை செய்குதலையும் புலா லுண்ணுதலையும் விட்டு விடுகிறேன் அடியேன் மனதி லின்ன மொரு சங்கை யுண்டு - அஃதென் னெனில் அடியே னறிந் தொரு கொலைகளைச் செய்யா விடினும் ஓட நடக்க வருகிற விடங்களிலே என்னை யறியாம லொரு சீவகொலைகள்நேரிட்டால் அந்த தோஷத்தை நீக்கிக் கொள்ளுதற் குபாய மென்ன வென்று கேட்டளவில் அவனை நோக்கி மேற் கூறுகின்முர்

செய்துயிர்கட்கினிமைகொல்லாநோன்பியற்
றும் வேலைகுருசேவைதன்னுன்
வையகத்தா டறுமறியாக்கொலைமையதான்
மக்களொடுன்மனையுண்டானு

முய்வதிலைநீயெவணம் வெறிதற்குன்
மனைபிறர்த்தோய்ந்துறினக்காலைக்
கையகலவிடுவதன்றிக்கொலவுமுளந்
துணியுமதிகாரத்தாலே

(எ - து) செய்துயிர்கட் கினிமைகொல்லா நோன்பியற்றும் வேலைகுரு சேவைதன்னுன் - வை யகத்து டறுமறியாக் கொலைமையது. (எ - து) தறுகட்டன்மை நீங்கிச் சர்வசீவன்களிடத் துங் களைகண் ணுண்டாகிய கொல்லா விரதியாய் நடந் து வருங் காலத்து உன்னை யறியாமல் வந்த கொ லைத் தோடமானது வேறொரு விதத்தா னசத்தை யடையும் அஃதெத்தா லென்னிற் சற்குருவினது திருப் பாதத்தை நியம மாக வழிபட்டுச் செய்யு ம் அவனதேவலின் வலியா லெனக்கொள்க. த றுகட் டன்மை நீங்கி யென்பதற்குப் பிரமாணம். சிவதரு மோத்திரம், வருந்துமேபதம் வைப்பின் மரிக்குமே-பொருந்துமண்ணிற் புழுக்கண மென்று ளம்-வருந்தியேபதம் மெல்லென வைத்திடா - தரு ந்தவத்தைப்பிரிந்த வரக்கனும். என்று மற்றும் வருவனவற்றுற்காண்க.—கொல்லா விரதமென்பத ற்குப் பிரமாணம். ஔவையார் நோன்பென்பது கொன்றுதின்னாமை. என்றுமற்றும் வருவனவற்று

ற்காண்க — சற்சீடன் அறியாமற் செய்ததோடத்தையும் ஆசாரியன் நீக்குவ னென்பதற்குப் பிரமாணம்· சிவதருமோத்திரம் விண்ணுளார் நரர் மற்றைவிலங்குமோ - பண்ணும் பாவப் பலத்தைக் கொடுப்பவன் - திண்ண மெய்ம்மன தேசிகன்தீர்த்திடும். பண்ணிற் பாவ விதஞ் சிவபத்தரும்.— என்று மற்றும் வருவனவற்முற் காண்க. இப்படி தேவரீர் கற்பித்த திரு வாக்கின் படியே என்னுடைய ஸ்திரீயும் புத்திரரு மிதற் கொவ்வா விடினு நான் மாத்திரம் சரீர பரியந்தரம் தவருமல் நடந்து வருகிறே னென்று விண்ணப்பஞ் செய்ய மேலுத்தரங் கூறுகின்முர். ஊன்மக்களோ டுன்மனை யுண்டாலு முய்வதிலைநீ (எ து) மாமிசத்தை யுன்னுடைய ஸ்திரீ புத்திர ருண்டாலும் அந்தபாவத்தா னீயும் நரகத் தழுந்துதல் சித்தம் (மேல்விஞ) எனக்கு மென்னுடைய ஸ்திரீ புத்திருக்கு மேகசரீரமா யூனுறக்க மொன்ரு யிருக்குதோ அவர்கள் வேறு நான் வேறு அவர்கள் செய்த பாவத்தை நானனுபவிக்க வேண்டியதென் (மேல்விடை) எவணம் வேறிதற்குன் மனைபிறர்த்தோய்ந்து தினக்காலைக் - கையகலவிடுவதன்றிக் கொலவுமுளந் துணியுமதிகாரத்தாலே.— (எ து) நீயெந்தப்பிரகார மிதுகாலத் தளவில் ஸ்திரீ புத்திரர்க்குமெ

னக்கும் பேதமென்று சொல்லினை யது பழுது. அ
தேனென்னி லுலகத்தின் கண்ணே யொருவன் த
ன்னுடைய ஸ்திரீ பரபுருட சங்கமம் பண்ணக்
கண்ட காலையின் அவளை விட்டுத்துறக்க வேண்
டுமென்கிறவிதியையும் பாராமல்நான் பிராணனுட
னிருக்கவிப்படி அழிவுசெய்யலாவதென்ன விவளை
குறுக்கறவாக்கினை செய்வேனென்று நெஞ்சிற்று
ணிதலினானும் இங்ஙனம் ஸ்திரீபுத்திரர் பிறரிடத்தி
ற்செய்த குற்றகுற்றங்களுக்கும் யானெனமுன்னி
ற்குமதிகாரத்தன்மை யுடையோனாதலினானு முன்
னுடைய ஸ்திரிபுத்திரர் செய்தபாவாதிகளுக்குண்
டான பலமுநீயனுபவிப்பது சித்தமென்றறிவாய்.
ஸ்திரிவிதிதவறிலவளைவிட்டுத் துறக்கவேண்டுமென்
பதற்குப்பிரமாணம் (சிவதருமோத்திரம்) அறிந்து
மனையா ளவலத்தை யவளைத்துறவா தனைவானு
ஞ் - சிறந்தகுரவன் மனைவியொடு செறிந்தார்க்கி
ணையேசெப்பியவித் - திறந்தான் மகபாதகமதனிற்
சிறுமைத்ததனாற்பாதகமென் - றறைந்தாமிதனுக்க
ணித்தா னவப்பாதகமு மினியறைவாம் என்றும்
(காசிகாண்டம்) பொருவில்கற்பின் வழீயபுன்மங்
கைய- ருரியமூன்றுமரபினுள்ளோரையும்-வெருவந்
தேங்கவிழுங்கியுமிழ்கிலாவெரியுந்திநரசிற்குடியேற்
றுவார்,--அன்றியும், நெறியிகழ்ந்துதன்மரபினினீ

லசெய்யு மறுவின்மைந்தனைப் பெறுதலின்மகப்பெ
ருதலுருற்-றுறைதனன்றுமற்றொருவனாலுயர்குலமு
ழுதுஞ் - சிறுமையெய்திலாங் கவற்றுறந்துறுபழி
தீர்ப்பார்.—என்றும், என்னநூற்கடல்கடந்துளோ
ருரைப்பதையெண்ணி-முன்னர் நின்றுபொய்மொ
ழிந்திடு முகிண்முலைத் துவர்வாய்ப்-பன்னிதன்னொ
டு மகத்துறந் தந்தணன்பரிந்தோர் - பொன்னவார்
முலைப் பூவையைக்கடிமணம் புரிந்தான்.— என்று
ம். தேசிகர் மன்னவர்சொழுனர் சீடரைந்தங்குடி
களைத் தோய் தேவிமாரை - யாசில் விதப்படி நட
க்கிற் காக்கபிழைத் திடில்வெறுத்திட்டகல நீக்க-
மாசுடையோ ரெனவறிந்து மவரைவெறுத் தில
திணங்கி வாழ்விப்பாரேற் - பேசியதீதொருசிறிது
ந்தமக்கிலவாயினுநரகிற் பிழையாதாழ்வார். — என்
றுமற்றும்வரு வனவற்றுற்காண்க. ஸ்திரீகள்பிழை
செய்யிற்றுறப்பதல்லது கொல்ல வொண்ணுதென்
பதற்குப்பிரமாணம். (அருட்பிரகாசம்) இல்லத்தி
ருக்குமனைதீவினைக ளியற்றினறஞ் சொல்லித்தடுக்
கவடங்காவிடிற்பின் றுறந்து தன்னெஞ்- செல்லை
க்குரிய நிலைசார்ந்தொழுகவிதன்றியன்னோர்க் - கொ
ல்லத்துணிபுல்லரன்றே சென்றூழிற் குளிப்பவரே.
என்றும், விண்டுளதன்மலனுயதில்லோர்ந்துவினை
ந்ததனை - யுண்டிடுவாருள ரோசொலுந்தீமையுனி

த்துறந்த - பெண்டீர்மற்றுருடன் கூடியென்பெண் கொலை பின்நரகிற் - கொண்டு சூழற்றுமென்றெண் ணுது கொல்லுங்கொடியவரே.—என்றுமற்றும்வரு வனவற்றுற்கண்டுகொள்க. இதன்கருத்து - அபுத் திபூருவத்தான்வந்ததோஷங் குருசேர்வையானீங் குமென்றும் யாதொருவனுந் தன்னுடைய ஸ்திரீபு த்திரருக்குத் தானதிகாரியாகையாலவர்களையுந்தரு மத்தின்வழியே யாக்கினைசெய்து நடப்பிக்கவேண் டுமென்றுங்கூறியது. (௧௧)

{ இப்படிகூறியசைவ சித்தாந்தியை நோக்
கிமேலும்அந்தபக்குவியானவன்விண்
ணப்பஞ் செய்யா நின்றுன். }

இங்ஙனந் தேவரீர் திருவுளம் பற்றியபடியே என்னுடைய பாசக்குழாங்களாகிய பலருள் யா தொருவனொன்னினைவின்படி வராவிடினு மெனதா க்கினைக் குட்பட்டிருந்துள்ள ஸ்திரிபுத்திரரைத்தெ ண்டித்து மாமிசபக்ஷணத்தை நிறுத்துவிக்கின்றே ன் அவர்கணில்லாவிடி னவர்களைவிட்டுத் துறந்தா யினுந் தருமத்தின்வழியே தவறுமல்நிற்கின்றேனெ ன்றவளவில் சித்தாந்தியாரவனை நோக்கிப்பின்னு மோருத்தரங் கூறுகின்றுர்.

தாலமிசையுனதுசுற்றத் தவர்கொலைமை செயினுன
க்குஞ்சாருநீவே.

றேலுனது குலநெறியை விடிலவரோடுளை பகரா
திகழ்ந்தன்னோர்தம்.
பாலுணவாதிகட விர்வதெனையது போன்மறம்புரி
வோர்பற்றைநீத்துண்,
மாலதனுற்கொலைமையறவறம் புரிவோர்தொடர்பு
றினல்வழிசார்வாயால்.

(எ - து) தாலமிசையுனதுசுற்றத் தவர்கொ
லைமை செயினுனக்குஞ் சாரும் (எ - து.) பூமியி
ன்கண்ணே நீயுமுன்னுடைய ஸ்திரீபுத்திரருங் கொ
லைமைசாராவிடினு முன்னுடைய மாதா-பிதா-தம்
பி-தமையன்-தங்கை-தமக்கை-மாமன்-மைத்துனன்
மற்றுமுண்டாகிய சுற்றத்தார்கொலைமை செய்தார்
ளாயினும் அந்தபாவத்தானீயு நரகத்தையனுபவிக்க
வேண்டும். (மேல்வினு) ஸ்திரீபுத்திரர்கள்என்னுடை
ய ஆக்கினைக் குட்பட்டவராதலினவர்களைத் தெண்
டித்துத் தருமத்தின்வழி நடப்பியாவிடிலெனக்குத்
தோடமென்பது சுபாவந்தான் மற்றுமுள்ள பே
ரொன்னுடைய சொற்கடங்கின பேரல்லர்மலுமிருக்
கஅவர்கள் செய்தபாவத்தா னெனக்கு நரகம்வர
வேண்டியதெப்படியென்ற பக்குவியைநோக்கிமே
லருளிச்செய்கிருர் (மேல்விடை) நீவேறேலுனதுகு
லநெறியைவிடிலவரோடுளைபகரா திகழ்ந்தன்னோர்
தம் - பாலுணவாதிகடவிர்வதெனையதுபோன் மற

ம்புரிவோர் பற்றை நீத்துண் - மாலதனாற் கொலை மையற வறம்புரிவோர் தொடர்புறினல்வழிசார்வா யால் (எ-து.) உன்னுடைய சுற்றத்தா ருன்னுடை ய சொற்கடங்கார்களென்றும் அவர்கள் வேறுநா ன்வேறென்றுஞ் சொல்லுவையாகி லுன்னுடையகு லாச்சாரத்தையுன்னுடைய சுற்றத்தாரிற்சிலர்தவறி நடந்தகாலத்தில் அவர்களுடைய சினேகத்தையும் பற்றற விட்டவர்களை நீத்தெவ்விடத்தும் பேசுத லொழிற் தவர்கள் வீட்டி னன்னபானாதிகளைவி டமெனக்கண்டு உன்னுடையஸ்திரீ புத்திரர்களுமவ ர்கள் மனைவழிவாசல் வழிசொற்பனத்தாயினும் போகாதபடி நிறுத்திமற்றுள்ளசுற்றத்தாரிற்சிலரவ ர்களோடு பேசுகினும் எனக்குவேண்டாதவர்களோ டுபேசலாவதேதென்றவர்களுடைய சினேகத்தையு ம் நீவிடுவதேன் இப்படிபிரயோசனமற்றவற்பகாரி யத்தளவில்மனம்வைத்து வெறுத்த நீமேலைக்குநரக த்தில்வீழ்த்தி மாறாத்துயரத்தைத்தருவதாகி சீவ கொலையாதி பாவங்களைப்பண்ணுமவரிடத்திற்சினே கிப்பதேன் ஆதலின்யாதொரு வராயினுங் கொலை யாதிக்கஞ்சாதபாவிகளாயில்தன்னவனென்றும்பிற னென்றும் பாராமலுடனேவிட்டுநீங்கிமறுமைக்கண் சுவர்க்காதி போகங்களை யடையவேண்டுமென்னு மனேவிச்சையினாலே கொல்லாமையாகியபேரறம்

புரிவோர்யாவராயினு மவரோடுமிருத்தசினேகம்புரிவாயாகில் நல்லறத்தின்வழியையெளிதினடைவாயென்றவாறு. இதற்குப்பிரமாணம் (திருவள்ளுவர்) மருவுகமாசற்ருர் கேண்மையொன்றித்துமொருவுகவொப்பிலாநட்பு, என்றும், (ஔவையார்) நல்லாரைக்காண்பனவுநன்றேநலமிக்கநல்லார்சொற்கேட்பனவுநன்றே -நல்லார்குணங்களுரைப்பனவுநன்றேயவரோ - டிணங்கியிருப்பனவுநன்று தியாரைக்காண்பனவுந் தீதேதிருவற்ற - தியார்சொற்கேட்பனவுந்தீதேதியார் - குணங்களுரைப்பனவுந்தீதேயவரோடிணங்கியிருப்பனவுந்தீது. என்று மற்றும் வருவனவற்ருற் காண்க—[இதன்கருத்து] கொல்லாவிரதியாயிஞேன் யாவராயினுங் கொலையாதிகட்கஞ்சாதபாவிகளைக்கண்டவிடத்து மவரதுசினேகத்தையுடனேவிடவேண்டுமென்றுகூறியது. (உ0)

இப்படிதேவரீர் கற்பித்ததிருவாக்கின்படி யடியேனு மென்னுடைய ஸ்திரீபுத்திராதிகளுங் கொல்லாமை புலாலுணவுநீங்கி நல்லோரைச்சினேகித்துப்பாவிகளது சினேகத்தை விட்டு அசரபதார்த்தத்தைக்குருவாதி நால்வர்க்கு முன்னூட்டிப் பின்புண்டுவருகிறேனென்றவள விலவனைநோக்கி மேற்சித்தாந்தியாரருளிச்செய்வார்.

சார்வொழிகொம்மடியாதி தாபரத்தானுறழ்தருநா
ய்த்தன்மையோரி.
னேரலையோய்கேண் முடிவிவ்வருபுரம் போய்வீனு
ளாய் நீக்கேல்வாணுட்
பார்மிசை நீ புரியலைமெய்த்தவர்குழுவுற்றற மவர்
சொற்படிசெய்நாளுஞ்.
சேருமனேசத்திபரஞானமற்றுனடைவைமுத்தித்தி
ருநாடன்றே.

(எ-து.) சார்வொழிகொம்மடி யாதிதாபரத்து (எ-து) அப்படிசெய்யுமுறைமைசெய்துஅசரபதார்த்தத்தை யுண்பாயாயினுமவற்றின் கண்ணுநீக்கவேண்டியதுண்டு அஃதேதெனிற் கொம்மட்டிக்காய் கடைச்சரக்குகளான உள்ளிவெள்ளுள்ளி முதலியவைகள் (இதற்குபிரமாணஞ்) சைவசமயநெறிவிளக்கம் - உள்ளிவெள்ளுள்ளி யுதும்பரஞ்செம்முருங்கை- வள்ளிவசளைமதுக்கோவை-வெண்கத்தரிக்காய்தெற்றுங்காய் வில்வக்காயுண் பதலகொம்மட்டிக்காயும் எண்ணேப்புண்ணுக்குப்பெரும்பீர்க்கெனுமிவையுமுண்ணேலுருண்டசுரையும் —என்று மற்றும் வருவனவற்றுற்காண்க (மேல்வினு) அசரபதார்த்தத்தினு முளவோதோடம் (மேல்விடை) உளனுறழ்தரும். எ-து கொம்மட்டியாதிநிடேதபதார்த்தமாதலின்புலாலினையொக்கு மெனக்கொள்க நாய்த்தன்

மையோரினேரலையோய் கேண்முடிவு (எ-து.) ஒரு வேட்டைக்காரன் நாயானதைப் பிடித்துவந்துபொ ற்சங்கிலியினாற் கட்டிவைத்துக்கொண்டு பாற்சோ ற்றையிட்டு வளர்த்தாலும் அச்சங்கிலி நெகிழ்ந்த மாத்திரத்தின்மலத்தினைப் பழையதோலினை முறட் டெலும்புகளைக்கௌவிக்கொண்டுஅருகாகவருகிறம னிதனைக்கண்டு உறுமுதல் போலுமொருவன்பாவ மிது புண்ணியமிதுவென்று சொல்லுமளவுங்கேட் டிருந்து அவ்விடம்விட்டு நீங்கினமாத்திரத்திற்பின் னும் பாவத்தைச்செய்து கொண்டு நல்வழி காட்டு வானைக் காணுந்தோறும் வெறுப்புடையராயிருந் துள்ளவுலகாயுதனாதி மூடர்களைப்போலும் அன்றிக் கொலைபாவமென்று கூறியமாத்திரத்திற் கொலைசெ ய்குதற்குமஞ்சி, இங்ஙனம் - நாய்த்தன்மையோரெ ன்றதற்குப்பிரமாணம் (நாலடி) அவ்வியமில்லாரற த்தாறுரைக்குங்காற்-செவ்வியரல்லார்செவிகொடுத் துங் கேட்கிலார்-கௌவித்தோறின்னுங் குணுங்கர் நாய்பாற்சோற்றின் - செவ்விகொளறேற்ருதாங்கு. —என்றும் (நீதிசாரம்] கன்மமேபூரித்தகாயத்தோர் தஞ்செவியிற், றன்மநூல்புக்காலுந்தக்காதே-சன்ம மெலும், புண்டுசமிப்பிக்கு நாயுண்ணுவினெய்யத னை யுண்டுசமிப்பிக்கு மோவோது. என்றுமற்றும்வ ருவனவற்றாற் காண்க. இவ்வருமடபுரம்போய் வீ

ளாய் நீக்கேல்வாணுட்-பார்மிசைநீ புரியலைமெய்த்தமர்குழுவுற்றறமவர் சொற்படிசெய்ஞளுஞ் சேருமஞ்சுத்திபர ஞானமற்று னடைவைமுத்தித்திருநாடன்றே. [எ-து.] சென்மாந்திரங்களிற்செய்துள்ளதபோபலத்தால்அரிதாயிங்ஙனங்கிடைத்துள்ளவிந்தச்சரீரம் நீர்க்குமிழிக்கொப்பா யழிவதாதலின்இதுள்ளபொழுதே செய்யவேண்டியவறங்களைச்செய்துமுடியாது இச்சரீரத்திற்கருந்துதல் பொருந்தலைக் கூட்டுத றொழிலா யிதற்கமைத்த நாள்களைவீணிற்கழித்து யமதண்டனைக்குட்படாவகை யறஞ்செய்வாய் செய்யுமிடத்து ஒன்றை நீ புண்ணியமென்றெண்ணிச்செய்யப்பாவமாயினுமாகும் பாவமென்றெண்ணி நீங்கப்புண்ணியமாயிருப்பினு மிருக்குமாதலின் உனதுசுதந்தரத்தாற் செய்குதலொழிந்து பூமியின்கண்ணே வேதாகமவிதிதவருது கொலையாதிகளை நீங்கிய சிவஞானி யாரது கூட்டத்தினையணுகிப் பத்திமையான் வழிபட்டு அவர்களது திருவாக்கின்படியே தீவினைகளைநீங்கி நல்வினைகள்செய்யக்கடவாயிங்ஙனம் நாடோறும்வழுவாது செய்குவையாயினுன்னுடையமனசு நிருமலமாம் அதனுற்பாரம்பரியத்திற் சிவஞானமு முண்டாம் அந்தஞானத்தான் மோட்சமாகிய பெண்ணிருந்துவாழும்பூரணதேசமடைகுவை. எ-று [மானிட சரீரமடைகுதலரி

தென்பதற்குப்பிரமாணம்] திருமந்திரம். பெறுதற்கரியபிறவியைப்பெற்றும்- பெறுதற்கரியபிரானடிசேராப்- பெறுதற்கரியபிராணிகளெல்லாம் - பெறுதற்கரியதோர்பேறிழந்தாரே —என்றுஞ் [சிவஞானசித்தி) அண்டசஞ்சுவேதசங்களுற் பீசஞ்சராயுசத்தோடெண்டருநாலெண்பத்துநான்கு நூறுயிரந்தா- னுண்டுபல்யோனிதோறு மொழித்துமானிடத்துதித்தல்-கண்டிடிற்கடலைக்கையானீந்தினன்காரியங்காண் என்றும் [அறிவானந்தசித்தி.] தேரிற்சதிரியுகமிரண்டாயிரநாட்டிங்களாண்-டோரினந்நூற்றி லயன்மாண்டுகொந்தமு முற்றுத்தென்பாற்-சேருநுகத்துளையின்வடபாற்கழிசெல் லெளிது-சாரும்பிறப் பொழித்திம்மானிடத்திற்சனிக்கரிதே.—என்றும் மற்றும் வருவனவற்றுற்காண்க. யாக்கை நிலையாமையின்விரைந்தறஞ்செய்யவேண்டுமென்பதற்குப்பிரமாணம் [திருவள்ளுவர்] நாச்செற்றுவிக்குண்மேல்வாராமுனல்வினை - மேற்சென்றுசெய்யப்படும். என்றுந் [திருமந்திரம்.] இக்காயநீக்கியினியொருகாயத்திற்-புக்குப்பிறவாமற் போம்வழிநாடுமி னெக்காலத்திவ்வுடல்வந்தெமக்கானதென்-றக்காலையுன்னவருள்பெறலாமே —என்றுந் [தேவாரம்] நடலைவாழ்வு கொண்டென்செய்துநாணிலீர்-சுடலைசேர்வதுசொற்பிரமாணமே-கடலி னஞ்சமுதுண்டவர்கைவிட்டா-லுடலி

ஞர்கிடந் தூர்முனிபண்டமே —என்றுந் [திருப்பாட்டு] வாழ்வாவதுமாயமிது மண்ணாவதுதிண்ணம் பாழ்போமதுபிறவிக்கடல் பசிநோய் செய்தபறிதான்-றாழாதறஞ்செய்மின்றடங்கண்ணான்மலரோனுங் கீழ்மேலுற நின்றான்திருக்கேதார மென்னீரோ.—என்றுஞ் [சிவஞானசித்தி] கருவிலுளழிவதாயுங் கழிந்திடாதழிவதாயும் - பருணமித்தழிவதாயும்பாலனையழிவதாயும்- தருணனையழிவதாயுந் தானரைத்தழிவதாயு-முருவமேயழிவேயானா லுள்ளபோழ்தேபாருய்ய.—என்றுஞ் [சிவதருமோத்திரம்] அழியுமாக்கைகொடே யழியாப்பதங்- கெழுமுவார்பெற்றதே நல்லகேள்வியுமழியுமாக்கைதனையழியாதெனவிழுவரேநரகக்குழி வெய்யரோ.—என்றும்(பட்டினத்துப்பிள்ளை) இன்றிருந்துநாளை யிறக்குந்தொழிலுடைய - புன்றலைய மாக்கள் புகழ்வரோ - வென்றிமழு, வாளுடையான் றெய்வமருதுடையானையேனை, யாளுடையான் செம்பொனடி— என்றும் (போதரத்திநாகரம்) காயமானது நீரிடைக் குமிழிபோற்கழியுமென்றறிந் . தேயுமாயு மூனினைமெய்யென முழுமலவயிறது வளர்த்தற்கே - யாயதீவினை பற்பலமருவியங்க வைசெய்து கழிந்தேவிட் - டேயுமாறெனையாண்டவ னென்பதற் கென்செய்து முடிந்தேனே.—என்றும் (நாலடி) புள்ளுனி மேனீர்போனிலை

யாமையென் றெண்ணி யின்னினியேசெய் கவறவி ஊ - யின்னினியே - நின்ருனிருந்தான் கிடந்தான் றன்கேளலறச் - சென்ருனெனப்படுதலால். என்று மற்றும் வருவனவற்ருற்கண்டு கொள்க.—அறமும் பெரியோர் சொன்ன நெறியேவேண்டு மென்பதற் குப்பிரமாணம் (சிவானந்தமாலை) ஆர்வமென்றுசெ ற்றத்தையாரிடத்துங் கொள்ளாதே - சாரமுள்ள தெவ்விடத்துந் தான்கொண்டு தீரவுணர் - நல்லோ ர்தஞ் சொல்லைநமுவா மனன்னெஞ்சே — நில்லாயி துவெநிலை என்றும் ஔவையார் மூத்தோர் சொல் வார்த்தைய மிர்தம். என்றும் (நாலடி.)அறிமினற நெறியஞ் சுமின்கூற்றம் - பொறுமின் பிறர்கடுஞ் சொற்போற்றுமின்வஞ்சம் - வெறுமின்வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும் – பெறுமின் பெரியோர் வாய்ச்சொல். என்றுமற்றும் வருவன வற்ருற்கா ண்க. பெரியோரைச் சார்தலின் முத்திகைவல்லி யமென்பதற்குப் பிரமாணம். (அருட்பிர காசம்) கொலையாதியோ ரைந்துங் காமாதியாறுங் குலைந் து – நிலைநிலையாது வெண்மை தோன்றியு யிருணி றைந்த மலைச்சிலையாதியு மொளிதென்றுவ ணெங்கு ந்திகழ்ந் திரண்டற் – றலையாதிருக்கும் பெரியோர் தங் கூட்டமடைந்தவர்க்கே என்றும் (போதரத்தி ஞகரம்) நித்தருருளிய நெறிதெரிவது நிமலன்

றன் கழலென்னுஞ் - சுத்தவாரமு துறுசுவை தருவ துஞ் சொருபனற்கழற்கன்பாம் - பித்ததாகியபெரு நலம் விளைவதும் பேரொழி லடியாரா - லத்திஞலடியாரவை கூட்டியவதிசயமளவன்றே என்றும் (திருவாசகம்) உடையாளுன்ற னடுவிருக்குமுடையாண டுவுணீயிருத்தி - யடியேனடுவுளிரு வீருமிருப்பதா ஞலடியேற்குன் - ன்டியார் நடுவுளிருக்கு மருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம் - முடியா முதலே யென் கருத்துமுடியும் வண்ணமுன்னின்றே. என் றுமற்றும் வருவன வற்முற் காண்க — இதன் கருத்து. அசரபதார்த்தத்திலும் நிஷேதபதார்த்தங்க ளைவிடவேண்டுமென்று மேலையாதொரு காரியமு நாதாக்களது திருவாக்கின்படி நடக்க வேண்டுமென்றும் அப்படி நடக்கிற் பாரம் பரியமாய் முத்தி கைவல்லியமாமென்றுங் கூறியது. (உக)

கொலைமறுத்தல்



